# வேளாண்மைப் பழமொழிகள்

இல. செ. கந்தசாமி
தமிழ்த்துறை
வேளாண் பல்கலைக் கழகம், கோயமுத்தூர்-641 003

விற்பனை உரிமை

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1
1978

முதற்பதிப்பு சனவரி 1978
உரிமை ஆசிரியருக்கு

விற்பனைக் கிளைகள்
திருநெல்வேலி-6, மதுரை-1,
கோயமுத்தூர்-1, திருச்சி-1,
கும்பகோணம்.

விலை ரூபாய் 4

அச்சிட்டோர்
உழவன் அச்சகம்
கணபதி, கோவை-641 006

வரப்பே தலகாணி
வைக்கோலே பஞ்சுமெத்தை
வேர்வையே பெருங்குளியல்
வெற்றுடம்பே பட்டாடை

ஓ.... வெள்ளை உள்ளங்களே!
உங்களுக்காக....

# அணிந்துரை

கம்பன் என். சுப்பிரமணியன்

பழமொழிகள்!

பழமையான மொழிகள் பழமொழிகள்!

பழவகைகள் உடலுக்கு உறுதி ஊட்டுகின்றன!

அதுபோலப் பழமொழிகள் உள்ளத்தில் கிளர்ச்சியையும் மூளைக்கு வேலையையும் கொடுக்கின்றன.

பழமொழிகள் சிந்தனையைத் தூண்டி செயல்படச் செய்கின்றன.

பழமொழிகள் ஞானம் பெற்ற குழந்தைகள்

அறிவு வேறு - ஞானம் வேறு என்று உணர வேண்டும்.

வெறும் அறிவும் - படிப்பும் - பட்டமும் மாத்திரம் சோறு போடாது!

அறிவும் அனுபவமும் சேர்ந்து செயல்படும்போதுதான் ஞானம் பிறக்கிறது.

Wisdom is born due to the interaction of knowledge and experience.

எனவேதான் பழமொழிகள் ஞானம் பெற்ற குழந்தைகள் ஆகின்றன.

ஐவரி டவர் (Ivory tower)

ஏர் கண்டிஷன் ஆராய்ச்சியாளர்கள்

மாடு மேய்க்கும் மாடசாமி

ஆடு மேய்க்கும் ஆவுடையப்பன்

விதை விதைக்கும் வேலுச்சாமி

உழவு செய்யும் உப்பிலியப்பன்

களை எடுக்கும் காத்தாயி

அறுவடை செய்யும் அருக்காணி

அதிகாரம் செய்யும் அப்புசாமி

— ஆகியோரை எல்லாம் இணைக்கும் சங்கிலியாக - பலம் பொருந்திய பாலமாக இருப்பது பழமொழிகள்.

யதார்த்தவாதி வெகு ஜன விரோதி — என்று பழமொழி உண்டு! யதார்த்தமான - பச்சையான உண்மைகளை வெடிக்கவைப்பது பழமொழிகள்.

உண்மை பேசுவதால்தான் பழமொழிகள் மக்களிடம் பரவவில்லை. குறிப்பாக படித்தவர்களுக்கும் பழமொழிகளுக்கும் வெகுதூரம் என்பதை நடைமுறையில் காண்கின்றோம்.

பழமொழிகளை இடம் - பொருள் - ஏவல் - காலம் அதாவது கால - தேச - வர்த்தமான அடிப்படையில் பேச வேண்டும், எழுத வேண்டும். இல்லையெனில் இந்தப் பழமொழிகள் பேசுகிறவனையும் - கேட்கிறவனையும் முட்டாள் ஆக்கி விடும்.

பழமொழிகளை அடிப்படையாக வைத்து ஆராய்ச்சி செய்ய ஏராளமான வாய்ப்புகள் உள்ளன. அதன் விளைவாக கல்வி - ஆராய்ச்சி உலகில் பெரிய புரட்சிகரமான மாறுதல்கள் - விளைவுகள் ஏற்பட வாய்ப்பு உண்டு.

செவி வழிச் செல்வமாக வந்த பழமொழிகள் ஏராளம். சுமார் பனிரெண்டாயிரம் பழமொழிகளைத்

தொகுத்து சைவ சித்தாந்தக் கழகம் வெளியிட்டுள்ளது. பல அன்பர்களும் நூறு-ஆயிரம் கொண்ட சிறு சிறு பழமொழித் தொகுப்புகளை வெளியிட்டுள்ளனர். அவைகள் எல்லாம் பொதுவான சமுதாயப் பழமொழிகள்.

இதன் அடிப்படையில் நண்பர் இல. செ. கந்தசாமி அவர்கள் வேளாண்மைப் பழமொழிகள் பலவற்றை தொகுத்து நமக்குப் படைத்துள்ளார்.

இந்தப் பழமொழிகளை அடிப்படைத் தத்துவமாக வைத்துக் கொண்டு என் போன்ற விவசாயப் பட்டதாரிகளும் விவசாயிகளும் ஆராய்ச்சி செய்து பார்க்க நிறைய வாய்ப்பு உண்டு, அதனால் சமூகம் பயன்படும்.

இன்று விஞ்ஞானி ஐன்ஸ்டைனின் நூற்றாண்டு கொண்டாடுகின்றோம். மாயக் கொள்கைகள்-கோட்பாடுகள் என்று நாம் ஒதுக்கி வைத்த இந்திய வேதாந்தத் தத்துவமே ஐன்ஸ்டனை விஞ்ஞானி ஆக்கி நோபல் பரிசு பெறச் செய்தது.

நாம் நோபல் பரிசு பெறவேண்டிய அவசியம் இல்லை. ஏன் என்றால் அதிலும் அரசியல் கலந்துள்ளது.

நமது நாட்டு மக்களுக்கு ஒழுங்காக, வயிறாரச்சோறு கிடைக்கவேண்டுமென்றால் நமக்கு மேல்நாட்டுத் தத்துவங்களைவிட, நம் நாட்டுத் தத்துவங்களில் நிறைய சரக்கு உண்டு என்ற நம்பிக்கை வர வேண்டும்.

எனவே சத்தான சரக்குகளைத் தன்னகத்தே கொண்ட வேளாண் பழமொழிகளை வேளாண் பட்டதாரிகளும் விவசாயிகளும் ஆய்வு செய்து, நல்லது - கெட்டது அறிந்து செயல்படுத்தினால் விளைச்சல் பெருகும் என்பதில் ஐயமில்லை.

இப்பழமொழித் தொகுப்பாம் மாலையை அளித்த பேராசிரியர் இல. செ. கந்தசாமி அவர்களின் முயற்சிக்கு, நமது பாராட்டுதல்களையும் நன்றியையும் சொல்லக் கடமைப் பட்டவர்களாவோம்.

□

# 82 ஆண்டுகளுக்குப் பிறகு...

பழமொழிகள் அனுபவத்தின் வெளியீடுகள். கேட்போர் உள்ளத்தை ஈர்க்கின்ற ஒரு வரி இலக்கியங்கள். காலத்தை வென்று நிற்கும் ஆற்றல் பெற்றவை. பயன் படுத்துகிற இடத்தையும் சூழ்நிலையையும் பொறுத்து அவற்ருல் மிகுந்த பயன் பெறலாம்.

1896 தொடங்கி இன்றுவரை (1978) பழமொழிகள் தொடர்பாக வெளிவந்துள்ள முதன்மையான நூல்கள் பெரும்பாலானவற்றிலிருந்து ஒப்பு நோக்கித் தொகுத்த தோடு 1972 முதல் 1978 வரை யான் சிற்றூர்கள்தோறும் ஆங்காங்கே சேர்த்துத்தொகுத்த பழமொழிகளையும் இணைத்து 'வேளாண்மைப் பழமொழிகள்' வெளிவிடப்பெறுகின்றது.

முதன்முதலாக வேளாண் பழமொழிகளை மட்டும் தொகுத்து 'வேளாண்மைப் பழமொழிகளும் வழக்குச் சொற்களும்' என்ற பெயரில் 1896-ல் வெளியிட்ட சி. பென்சன், சி. கே. சுப்பாராவ் ஆகிய இருவர்க்கும், விவசாயம் என்ற நூலில் ஒரு பகுதியாக வேளாண்மைப் பழமொழிகளை வெளியிட்ட (1900) சேலம் பகடால நரசிம்மலு நாயுடு அவர்களுக்கும் தமிழ் உலகம் குறிப்பாக வேளாண்மை உலகம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளது. 'வேளாண் மைப் பழமொழிகள்' என்ற இந்நூலுக்கு அடிப்படையாக விளங்கியவை இவ்விரு நூல்களுமேயாகும்.

கருத்துக்களுக்கு ஏற்பப் பழமொழிகளைப் பகுத்து பொருள் அடிப்படையில் முறைப்படுத்தப் பட்டுள்ளது. வேளாண்மைச் சொற்களைக்கொண்டு வேளாண்மை அல்லாத வேறு ஒரு பொருளை விளக்குகின்ற ஒட்டுமொழிகள், உவமைகள் ஆகியவற்றைப் பழமொழிகளோடு சேர்த்துப் பிறழ உணரக்கூடாது என்பதற்காக தலைப்பிட்டுக் காட்டப் பட்டுள்ளது. அடுத்து உலக நாடுகளில் வழங்கும் வேளாண் பழமொழிகளின் தொகுப்பும் கொடுககப்பட்டுள்ளது.

வேளாண் பல்கலைக்கழக ஆராய்ச்சித் திட்டத்தின்கீழ் 'பழமொழிகளில் வேளாண்மை' என்ற விரிவான ஆராய்ச்சி நூல் ஒன்றும், எம்மால் எழுதி முடிக்கப்பட்டுள்ளதால் பழமொழிகளுக்கு முழுமையான விளக்கம் தராமல் இறுதியில் தேவையானவற்றிற்குச் சொற்பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது.

மக்கள் இலக்கியங்களாகிய நாட்டுப்புறப் பாடல்கள், பழமொழிகள் ஆகியவற்றைத் தொகுக்கும் பணி தொடர்ந்து நடைபெற வேண்டும். நமது முன்னோர்களின் தொழிலறிவும் வெளிப்படையான மனப்போக்கும் அறிந்து இன்றைய வாழ்விற்கு தேவையானவற்றைக் கடைப்பிடிக்க இப்பழமொழிகள் நன்கு உதவும் என்பதைப் பழமொழிகளை உணர்ந்தவர் நன்கு அறிவர்.

இந்நூலைப் படிப்போர் இந்நூலில் சேர்க்காது விடுபட்ட, தங்களுக்குத் தெரிந்த, தங்கள் பகுதியில் வழங்குகின்ற பழமொழிகள், பழமொழிகளுக்கு ஆழ்ந்து அகன்ற பொருள்கள் இருப்பின் தெரிவித்தால், அடுத்துவரும் பதிப்புகளில் நன்றியுடன் சேர்த்துக்கொள்ளப்படும்.

இந்நூல் தொகுக்கும் முயற்சியில் ஈடுபட்டபொழுது 'இந்திய வேளாண் பழமொழிகள்' 'உலக வேளாண் பழமொழிகள்' ஆகிய இரண்டு தொகுப்பினைக் கொண்டு வரவும் உலகின் பல பகுதிகளிலும் பண்டைய மக்கள் கொண்டிருந்த வேளாண்மை பற்றிய பொதுவான எண்ணங்களை அறியவும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது என்பதையும் தெரிவித்துக்கொள்வது எனது கடமையாகும்.

82 ஆண்டுகட்குப்பிறகு வெளிவரும் வேளாண்மைப் பழமொழிகள் என்ற இந்த நூலுக்கு அணிந்துரை வழங்கிய, பழமொழிகளில் ஆழ்ந்துதோய்ந்த நண்பர் திரு. கம்பன் என். சுப்பிரமணியம் அவர்களுக்கும் இந்நூல் வெளிவர பல்லாற்றானும் உதவிய அனைவர்க்கும் நன்றி உடையேன்.

கோயமுத்தூர்-3
26—1—78

அன்புடன்
இல. செ. கந்தசாமி

# வேளாண்மைப் பழமொழிகள்

ஓர் அறிவியல் நோக்கு

### உழுதொழில்

பழமொழி என்பது பட்டறிவால் தோன்றிய அனுபவ மொழி. இது பல நூறு ஆண்டுகளாகப் பல்லாயிரம் மக்களால் வழிவழியாக வழங்கப்பட்டு வரும் பழமையான மொழி. காலவெள்ளத்தில் அம்மொழிகளில் சில வளர்ந்தும் தேய்ந்தும் மாறுபட்டும் வழங்கிவருவதும் உண்டு. எவ்வாரு யினும் அம்மொழிகள் பல காலங்களில் மிகப் பலரால் செய்யப்பட்ட ஆராய்ச்சியின் தெளிந்த முடிவுகளாகும். முன்னேயோர் கண்ட அம்முடிவுகள் பின்னேயோர்க்கு வாழ்வில் தெளிவினை உண்டாக்குவதால் அவை மக்களிடையே செல்வாக்குப் பெற்றுவிட்டன. பழம் இனிமை தருவதுபோல அம்மொழிகள் நன்மையைத் தருவதால் பழம் மொழிகளாகி வாழ்விற்கு வளம் ஊட்டுகின்றன.

### பழமொழியின் பண்புகள்

பழமொழிக்கென சில பண்புகள் உண்டு. சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஆற்றல் பழமொழிக்கு உள்ள தனிப் பண்பாகும். அவை மக்கள் மனதில் ஆழப்பதிந்து நற்செயலைச் செய்யத் தூண்டும் தன்மை உடையன. பழமொழியால் விளையும் பயன் நன்மை உடையதாகவே இருக்கும். செறிவு, சுருக்கம், தெளிவு, எளிமை, ஆற்றல் முதலிய பழமொழியின் பண்புகளை ஒன்று திரட்டி நூற் பாவாக்கி, பழமொழிக்கு முதுமொழி என்று பெயரிட்டு உரைக்கின்ருர் தொல்காப்பியர்.

நுண்மையும் சுருக்கமும் ஒளியுடை மையும்
எண்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வருஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப

தொல் - பொருள் - செய்யுள் 170

### பழமொழிகளின் உருவம்

பழமொழிகளின் அமைப்பே மக்கள் மனதில் பதியக் கூடிய வகையில் எளிய வடிவம் கொண்டது. காலப்பயிர் கடக்க நிற்கும் எனச் செய்திகளைச் சொல்பவை, ஈரநிலத்தில் ஏரைப்பிடி எனக் கட்டளை இடுபவை, அறிவிலே விளையுமா? எருவிலே விளையுமா? எனக் கேள்வி கேட்டுச் சிந்திக்க வைப்பவை, காலப்புழுதி இல்லாதவன் கைமுதல் இழப்பான் என எச்சரிக்கை விடுபவை, எள்ளு விதைக்க எறங்காடு கொள்ளு விதைக்கக் கல்லங்காடு, எண்ணிப்பார் குடித்தனத்தை எண்ணுதேபார் வெள்ளாமையை என எதுகை மோனையோடு வருபவை எனப் பழமொழிகளில் பல்வேறு உருவங்கள் இருப்பினும் அனைத்தும் ஓர் எளிமையை அடிப்படையாகக்கொண்டே விளங்குகின்றன.

### பழமொழியின் பயன்

இப் பழமொழிகளின் வாயிலாகப் பண்டைய மக்களின் நாகரிகம், பண்பாடு, சமுதாய நிலை, தொழில் முறைகள் முதலியவற்றை நன்கு அறிந்து கொள்ளலாம். இலக்கியங்கள் போல பழமொழிகளும் மக்களின் வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டும் காலக் கண்ணுடியாகும்.

இப்பழமொழிகள் தமிழ் மொழியிலன்றி உலகில் உள்ள பழமையான மொழிகள் எல்லாவற்றிலும் உண்டு. பல துறைகளிலும் இப்பழமொழிகளைக் காணலாம்.

### வேளாண் பழமொழிகள்

தமிழில் ஏறத்தாழ 12000 பழமொழிகள் உள்ளன. அவற்றுள் 4000-க்கும் மேற்பட்டவை வேளாண் தொழில் பற்றி வெளிப்படையாகவும் குறிப்பாகவும் கூறும் பழமொழிகளாகும். அவை நிலம், நீர், உழவு, பருவம், பயிர், எரு, களை, காப்பு முதலாய வேளாண்மை இயல், வேளாண் பொறியியல், கால்நடை, கால்நடை மருத்துவம், மீனியல், வனஇயல், மனையியல், வேளாண் சமுதாய இயல் ஆகியவை பற்றித் தனித் தனியாக விளக்குகின்றன. இவ் வேளாண் பழமொழிகளில் பல அறிவியல் ஆய்வுக்குப் பொருந்த உள்ளன. இன்னும் பல ஆராய்ந்து காண வேண்டிய உண்மைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளன.

## வேளாண்மை இயல்

### உழவியல்

வேளாண்மையில் பருவம் பார்த்துப் பயிரிடல், சரியான அளவில் உழவு செய்தல், போதிய இடைவெளி விட்டு விதைத்தல், நடுதல், களை எடுத்தல், ஊடுபயிர் முறைகள், வானிலை முதலாய பயிரிடுதற்கு ஏற்ற கட்டுக் கோப்புச் சாகுபடிக் குறிப்புகளை உழவியல் தருகின்றது.

பாழில் போட்டாலும் பட்டத்தில் போடு
எழுழவு உழுதால் எருப்போடவேண்டாம்
அழிய உழுது அடர விதை
கார்ப்பயிர் கலந்து கெட்டது
பிசானப்பயிர் நெருங்கிக் கெட்டது
களைபிடுங்காப் பயிர் கால்பயிர்
காரையும் எள்ளையும் கருதிப் பயிரிடு

என்பன போன்ற பழமொழிகள் இன்றைய ஆராய்ச்சி முடிவுகளை உள்ளடக்கிக்கொண்டு விளங்குகின்றன.

*மண்ணியல்*

மண்ணின் தரத்தையும், மண்ணைத் தரப்படுத்தும் விதத்தையும், எந்த மண்ணுக்கு எந்தப் பயிர் பிடிக்கும் என்பதனையும் எந்தப் பயிருக்கு எத்தகைய உரம் போட்டால் மிகுந்த விளைச்சல் காணும்? எவ்வெப் பயிர்களுக்கு மிகுந்த உரம் தேவை என்பதையும் ஆய்கின்றது மண்ணியல்.

காணி தேடினும் கரிசல் தேடு
களர் முறிக்க வேப்பந்தழை
மஞ்சள் வைப்பது மதவை நிலத்தில்
ஆடு பயிர் காட்டும் ஆவரை நெல் காட்டும்
எள்ளும் கரும்பும் எடுக்கும் பயிராம்

முதலாய பழமொழிகள் பண்டைய உழவர் பெருமக்களின் ஆய்ந்து தெளிந்த முடிவுகளாகும். ஆராய்ச்சி செய்து காண வேண்டிய இத்தகைய பழமொழிகள் இன்னும் பலஉள.

*பயிரியல்*

இன்று போல் புதியபுதிய பயிர் இரகங்கள் காணப்பட வில்லை என்றாலும் பயிர்களின் தரத்தை உயர்த்த பல்வேறு பயிர்களை பயிரிட்டுப் பயிரிட்டு எது விளைச்சல் அதிகம் கொடுத்ததோ அதைத் தேர்ந்தெடுத்து அப்பயிர்களைப் பயிர் செய்ய வேண்டும் என்று கொண்டார்கள். நெல் பயிரிடுதலே பெருவழக்காக இருந்ததால் நெற்பயிர் பற்றிய குறிப்புகளே பழமொழிகளில் மிகுந்து காணப்படுகின்றன.

கதிருக்கு முந்நூறு நெல் இருந்தால் முழு விளைச்சல்

நட்டாலும் தில்லை நாயகம் நடவேணும்

கொம்பில் ஒரு நெல் விளைந்தாலும்
சம்பாவுக்கு ஈடாகாது

நெல்லுக்கு நேரே புல்

பனிக்குப் பலிக்கும் வரகு, உளுந்து
மழைக்குப் பலிக்கும் நெல்லு

இம்முறை இன்றைய பொறுக்கு இரகங்களைக் கண்டறியும் முறைக்கு இணையானதாகும்.

*விதையியல்*

இத்தகு உயர்விளைச்சல் இரகங்களைப் பயிரிடுதற்கு அடிப்படையான விதையினைத் தெரிவு செய்து, உலர வைத்து பக்குவப்படுத்தும் முறையினைக் கூறும் பழமொழிகள் விதை நுண்ணியல் ஆய்வுடன் ஒப்புநோக்கத்தக்கன.

காய்ந்த வித்துக்குப் பழுதில்லை
சொத்தைப்போல வித்தைப்பேணு
ஓடுகள் விதைவைக் கேடறக் காக்கும்
கலயப்பயிர் விதைத்து உழக்குப்பயிர் விளைந்தாலும்
புதுப்பயர் புதுப்பயர்தான்

*பூச்சி, நோயியல்*

எத்தகைய சீரிய முறையில் பயிரிட்டாலும் பயிருக்குப் பாதுகாப்பு இன்றேல் உரிய பலனை எதிர்பார்க்க இயலாது. இன்றுபோல் பண்டை நாளில் நோயும் பூச்சியும் அதிகம் இல்லை என்றாலும் குறிப்பிடப்பட்டுள்ள சில குறிப்புகள் இன்றைய ஆய்வுக்குப் பொருந்துவதாக உள்ளன.

அழுகைத் தூத்தல் அவ்வளவும் பூச்சி
ஆவணியில் நெல் விதைத்தால் ஆனைக்கொம்பு விழும்
ஆயிரம் கலம் நெல்லுக்கு ஓர் அந்து
மூலக்காற்று புழுவிழும்
செம்பாடு அடிச்சா எம்பாடு தீர்ந்தது
கீரைக்குப் புழு வேரில்

இத்தகைய விளைவுகளைக் குறிப்பிட்டு, அதற்குரிய மருந்திற்கு மாறாக, பூச்சிவிழும்பருவங்களில் பயிரிடுவதைத் தவிர்க்கவும்,

எங்கெங்கே புழு விழும் என்பதை அறிந்து வருமுன் காத்துக் கொள்ளவும் பயன்படும் குறிப்புகள் காணப்படுகின்றன.

## தோட்டவியல்

பருவத்திற் கேற்ற காய்கறி இரகங்கள், அவற்றைப் பயிரிடும் முறைகள், உயர் இரகங்களைக் கண்டு பிடித்தல், முதலியவை தோட்ட இயல் ஆய்வுகளில் அடங்குகின்றன.

ஆடிவாழை தேடிப்போடு
ஆடி அவரை தேடிப் போடு
ஆறு கொத்து நூறு தண்ணி வாழை
எட்டடிவாழை கமுகு, ஈரடிகருப் புகத்தரி, இருபதடிபிள்ளை
இஞ்சி லாபம் மஞ்சளில்

என்பன போன்ற பழமொழிகள் அறிவியல் நோக்கோடு காய்கறிகள் பயிரிட்டமையைப் புலப்படுத்துகின்றன. இம் முறைகள் இன்றும் பின்பற்றப் படுகின்றன.

## வேளாண் பொருளியல்

இன்று பண்ணை நிர்வாகம், இடுமுதல் செலவு, வரவு நிலை. வேளாண் விளைபொருள்களை விற்பதற்கும் வாங்குவதற்கும் உரிய சூழ்நிலை, ஆகியவற்றை நவீன நுட்பத்தோடு முன்னறிவிபபுச் செய்வதுபோலவே பண்டை நாளிலும் வேளாண்மைப் பொருளாதாரம் போற்றப் பட்டுள்ளது. ஒரு வேலி நிலத்தைப் பராமரிக்க ஆள், அம்பு, விதை முதலியவை குறிப்பிடப்பட்டுள்ளன. எப்போது விளை பொருள்களை விற்பது, எப்போது ஆடுமாடுகளை வாங்குவது, என்பது போன்ற குறிப்புகளும் காணப்படுகின்றன.

வேலி ஒன்றுக்கு ஈரணை மாடும் இரண்டு ஆளும்
வேலி ஒன்றுக்குப் பன்னிரண்டு கலம் விரைப்பாடு
கார்த்திகைக் கார் கடைவிலை, தைச் சம்பா தலைவிலை

'சித்திரை மாதம் சிறந்து மழை பெய்யாது போனல்
வில்லாததை விற்று வெள்ளாடு கொள்'

## வேளாண் விரிவினை

உழவர் பெருமக்கள் அண்மைக்கால நுட்பங்களைக் கடைப்பிடித்து சீரியமுறையில் வேளாண்மைசெய்ய அறிவுரை வழங்குவது, செயல்விளக்கங்கள் செய்துகாட்டுவது வேளாண் விரிவினையியலாரின் பணியாக இருந்து வருகின்றது. நல்ல தலைவர்களை உருவாக்குதல், வெளியீடுகள் மூலம் கருத்துக் களைப் பரப்புதல் முதலாய பணிகள் மேற்கொள்ளப்படுகின் றன. பண்டைநாளில் ஊரில் யார் சிறந்த முறையில் உழவுத் தொழில் செய்தார்களோ அவர்களே முன்னோடிகளாகவும் வழிகாட்டிகளாகவும் இருந்தனர்.

உழவற உழுதவன் ஊரில் பெரியவன்
உடையவன் பாராப் பயிர் ஒரு முழம் கட்டை

என்பன போன்ற பழமொழிகள் விரிவினை நோக்கில் கொள்ளப்பட வேண்டிய பழமொழிகள் என்ருலும் பொது நோக்கில் பழமொழிகள் அனைத்துமே விரிவினை இயலார் பயன்ப்டுத்த வேண்டிய மூலப்பொருளாகும்.

# கால்நடையியல்

## கால்நடை வளர்ப்பு

கால்நடைகள் வேளாண் தொழிலுக்குப் பெரிதும் துணை நிற்பவை. வேளாண்மை விளை 'பொருள்களைப் 'பகடுதரு செல்வம்' என்றே பண்டை நாளில் போற்றினர். உழவுக்குப் பயன்படும் காளைகள், எருவைத் தரும் ஆடுகள், பால் தரும் பசுக்கள், எருமைகள் ஆகியவையேபழமொழிகளில் பெரிதும் போற்றப் பட்டுள்ளன. குறிப்பாக, ஆடு வளர்ப்பது மிகச் சிறந்த தொழிலாகவும் போற்றப்பட்டு வந்துள்ளது.

"குண்டை பெருத்தால் குடி பெருக்கும்
மாட்டை நடையில் பார், ஆட்டைக் கெடையில் பார்
!! ஆடே பாட்டாமை ஆரியமே வெள்ளாமை
ஆவும் தேவும் ஐந்து வருசத்தில் பலன்
வடவியை வெட்டி ஆள்; எருமையைக் கட்டி ஆள்

என்பன போன்ற பழமொழிகள் கால்நடையின் இன்றியமையாமையையும் வளர்ப்பையும் பற்றிக் குறிப்பிடுகின்றன. இன்று வேளாண் மக்கள் கால்நடைவளர்ப்பை வருவாய்தரும் துணைத் தொழிலாகக் கொண்டுள்ளனர்.

## கால்நடை மருத்துவம்

கால்நடைகட்கு வரும் நோய் நொடிகளுக்குரிய மருத்துவ முறைகள் பாமர மக்கள் தெரிந்து கொள்ளும் அளவிற்கு வெளிப்படையாக இல்லை. மனிதர்களைக் கேட்டு அறிந்து நோய்க்குரிய மருந்து கொடுக்கலாம். ஆனால் கால்நடைகளைப் பார்த்து ஊகித்து அறிந்தே கொடுக்க வேண்டி இருந்ததால் அனுபவம் நிறைந்தவர்களே அதில் ஈடுபட்டு இருந்தனர்.

வெக்கைக்கு வேலி மறைப்பு
எருத்துப் புண்ணுக்கு சாம்பல் மருந்து

என்பன போன்ற பரவலாக இருந்த நோய்களும் மருந்துகளுமே கூறப்பட்டுள்ளன. இன்று இத்துறை மிக வளர்ந்துள்ளது என்பதை கால்நடை வளர்ப்போரும் நன்கு அறிவர்.

## வேளாண் பொறியியல்

வேளாண்மைப் பொறியியலில், வேளாண் கருவிகள் மண் மற்றும் நீர்வளப் பாதுகாப்பு, வேளாண்மைக் கட்டமைப்புகள், விளைபொருள் பதன் செய்தல் முதலியவை

ஆராயப்படுகின்றன. இன்றுபோல் பண்டை நாளில் வேளாண் கருவிகள் அதிகமில்லை. கலப்பை, பரம்பு முதலியவை பற்றிய ஓரிரு பழமொழிகள் மட்டுமே வழக்கில் உள்ளன.

கொம்பால் உழுது குண்டியால் மரமடி
மண்ணைப் புரட்டும் பண்ணைக்கலப்பை
நாட்டுக் கலப்பையால் நான்குமுறை உழு

என்பனபோன்ற சில பழமொழிகளே வேளாண் கருவிகள் பற்றி விளக்குகின்றன.

மண் வளத்தைப் பாதுகாத்தல், நீரைச் சிக்கனமாகப் பயன்படுத்தல் போன்றவற்றை மிக நுட்பமாக ஆராய்ந்து உள்ளனர்.

கல் உள்ளதே கிணறு, கரையுள்ளதே தோட்டம்
புடைக் கட்டுப் பயிருக்கு மடைக் கட்டுத் தண்ணீர்

என்பன இன்றைய ஆய்வுக்கும் பொருந்தி வருகின்றன.

பாசன நீரைக் கொண்டு செல்லும் வாய்க்கால்கள் மிகவும் சுத்தமாக இருக்க வேண்டும் என்பதையும், விளைந்ததை அறுவடை செய்வதில் காலமும் கவனமும் செலுத்த வேண்டும் என்பதையும்

முடப்புல்லும் முக்குறுணித் தண்ணீரைச் செறுக்கும்
எள்ளும் தினையும் எழுபது நாள்
சேற்று முகத்தில் சிரிப்பு, நெல்லு முகத்தில் நெருப்பு

என்பன போன்ற பழமொழிகள் விளக்குகின்றன.

## மீன்வள இயல்

தமிழகம் மீன்வளம் நிறைந்தது. கடலோரப் பகுதிகளே அன்றி, உள்நாட்டில் ஆறு, குளம், கிணறுகளிலும்

மீன் வளர்ப்பு நடைபெற்றது. 20 நூற்றுண்டுகளுக்கு முன் தோன்றிய சங்க இலக்கியத்தில் இருபதுக்கும் மேற்பட்ட மீனின் பெயர்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. 17ம் நூற்றுண்டில் தோன்றிய பள்ளு இலக்கியங்களில் இருநூறுக்கும் மேற்பட்ட மீனின் பெயர்கள் காணப்படுகின்றன.) எனினும் மீனியல் பற்றிய பழமொழிகள் மட்டும் மிகுதியாகக் காணப்படவில்லை.

சூலாகும் மீன்கள் ஒன்றை ஒன்று மோந்து கொள்ளும்
சிறு மீனெல்லாம் பெரு மீனுக்கு இரை
தூண்டில் காரனுக்கு மிதப்புமேலே கண்
நீர் உள்ள மட்டும் மீன்குஞ்சு துள்ளும்

என்பனபோன்ற மிகச்சில பழமொழிகளே காணப்படுகின்றன. இவைகளும் மீனியல் பற்றிய விளக்குவனவாக அமையவில்லை. இன்று நன்னீரில் அன்றிக் கழிவு நீரில் மீன் வளர்த்தல், மின் தூண்டலால் கருவேற்றி மீன் உற்பத்தியைப் பெருககுதல், பண்ணைகளில் மீன் வளர்ப்பை வருவாய் உள்ள தொழிலாகச் செய்தல் போன்றவற்றில் சீரிய முன்னேற்றம் கண்டுள்ளனர் மீனியலார்.

## வன இயல்

இன்று வனஇயலின் இன்றியமையாமை பெரிதும் உணரப்பட்டு வருகின்றது. மழை வளம் பெருகவும் மண் அரிப்பைத் தடுக்கவும் மரங்கள் தேவைப்படுகின்றன. இயற்கையாக இருக்க வேண்டிய மூன்றில் ஒரு பங்கு காடு களில் பெரும்பகுதி அழிக்கப்பட்டுவிட்டதால் இயற்கைச் சூழ்நிலையியலில் சமநிலை குறைந்து தீமைகள் விளைகின்றன.

காடு அழிந்தால் நாடு அழியும்
காடுகள் இருப்பின் நாடுகள் செழிக்கும்
மலைவளம்தானே நிலவளம் என்பர்

ஆகிய பழமொழிகள் காட்டியலின் சிறப்பை உணர்த்து கின்றன. ஆனல் இன்றைய வனவள அறிவியல்.

பண்ணைகளில் காடுவளர்ப்பு முறைகளை ஆய்கின்றன. பயிர்கள் வளராத தரிசு நிலங்களிலும் பண்ணையின் புறம் போக்கு நிலங்களிலும் வேலிக்கால்களிலும் எவ்வித மரங்களைப் பயிரிட்டால் மிகு பலன் அடையலாம் என்பதையும் குறைந்தகாலத்தில் மரங்களின் நிறைந்த வளர்ச்சிக்குரிய வழி வகைகள் என்ன என்பதையும் வனஇயலார் ஆய்ந்து வருகின்றனர்.

## மனையியல்

பண்டை நாளில் பாட்டி மார்கள் செய்த செயல்கள் இன்று மனையியல் என்ற அறிவியல் துறையாக வளர்ந்து உள்ளது. மனையியலில் குடும்ப நிர்வாகம், குழந்தை வளர்ப்பு உணவு, உடை உறையுள், சமூக உறவுகள் ஆகிய பகுதிகள் ஆராயப்படுகின்றன.

### குடும்ப நிர்வாகம்

ஒரு குடும்பம் செம்மையாக இயங்க வேண்டுமாயின் அக்குடும்பத்தின் தலைவி சிறந்தவளாக இருத்தல் வேண்டும். 'தற்காத்துத் தற்கொண்டான் பேணி தகை சான்ற சொற் காத்துச் சோர்விலாள் பெண்' என்று பெண்களுக்கு வள்ளுவர் கூறும் இலக்கணம் இன்று அறிவியல் விதியாக மலர்ந்து உள்ளது. வாழ்விலும் தாழ்விலும் வருவாய்க்கு ஏற்ப வாழ வேண்டும் என்பதை

பங்குனி என்று பருக்கிறதும் இல்லை
சித்திரை என்று சிறுக்கிறதும் இல்லை

என்று குறிப்பிடுகின்றது பழமொழி. எக்காலத்திலும் சம நிலையாக வாழ வேண்டும் என்பதைப் பொது அறமாகக் கொண்டிருந்தனர் என்பதே இப்பழமொழியின் கருத்தாகும்.

### குழந்தை வளர்ப்பு

உடல் வளத்தோடும் உள நலத்தோடும்

குழந்தைகளைப் பேணி வளர்க்க வேண்டிய நுட்பங்களைப் பல்வகையில் விரித்துரைக்கிறது குழந்தை வளர்ப்பியல். ஆனால் குழந்தைக்கு வழிகாட்டியாகத் தாய் விளங்க வேண்டுவதே மிகவும் இன்றியமையாதது என்பதை

குழந்தை வளர்ப்பது ஒரு கோயில் கட்டுவதற்குச் சமம்
தாயைப்போல பிள்ளை நூலைப்போல சீலை

தாயைப் பார்த்துப் பெண்ணைக் கொள்ளு
பாலைப் பார்த்துப் பசுவைக்கொள்ளு

என்றபழமொழிகள் அறிவிக்கின்றன. இவைவளர்ந்தநிலையை அறிவிப்பன என்றாலும் அடிப்படையாக மேற்கொள்ள வேண்டிய நடைமுறையினைக் குறிப்பிடுகிறது என்பதே உண்மையாகும்.

## உணவியல்

உணவின்றி யாரும் உயிர்வாழ்தல் இல்லை; எனினும் எல்லாரும் ஒரே மாதிரி உண்பதில்லை. எளிய, சத்தான, அளவான உணவே எல்லோராலும் விரும்பிப் போற்றப் படுகின்றது. உணவை முறையாகக் கடைப்பிடிப்பதற்கு ஏற்ப உடல் வளம் பெறும் என்பதை

உண்ட உடம்பிற்கு உறுதி
உழுத புலத்தில் நெல்லு

மாதா ஊட்டாத சோற்றை மாங்காய் ஊட்டும்

என்பன போன்ற பழமொழிகளால் அறியலாம். இன்றைய உணவு நுண்ணியல் மிக விரிவாக வளர்ந்துள்ளது. உணவுப் பொருள்களைப் பதப்படுத்துதல், குறைந்த விலையில் சத்தான உணவு தயாரித்தல், அறிவியல் நுட்பத்தோடு அண்மைக் கால வசதிகளைப் பயன்படுத்தி உணவு தயாரித்தல் போன்ற பல்வேறு வகையில் முன்னேற்றம் காணப்படுகிறது.

உடை

இன்றைய நாகரிகஉலகில் உடை இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளது.

ஆள் பாதி ஆடை பாதி
ஆடை இல்லா மனிதன் அரை மனிதன்

முதலாய பழமொழிகள் ஆடையின் சிறப்பை வலியுறுத்துகின்றன. பண்டை நாளில் விலைகுறைந்த ஆடையே போற்றப் பட்டது. 'வல்விலைக் கூறையும் மெல்விலைக்காளையும் ஆகாது' என்பது வாழ்வில் மேற்கொள்ள வேண்டிய சிக்கனத்தைத் தெளிவு படுத்துகின்றது. இன்று துணிகளின் நயம், அமைப்பு அதன் உழைப்பு, வண்ணம் முதலிய பலவற்றை மனையியல் கல்வி ஆராய்கிறது. எளிமையும் தூய்மையுமே எல்லாவற்றிற்கும் அடிப்படையாகும்.

உறையுள்

உண்டு, உடுத்து, உறைய இடம் வேண்டும். தேவைக்கு ஏற்பவும் சூழ்நிலைக்கு ஏற்பவும் உறையுளை - இல்லங்களை அமைத்துக்கொள்ள வேண்டும் என்பது மக்களுக்கு அறிவுறுத்தப்பட்டு வந்த பொதுவான உண்மை ஆகும்.

இடம்பட வீடு எடேல்
சிறுகக் கட்டிப் பெருக வாழ்

என்பன பழமொழிகள். மக்கள்தொகை பெருகிவரும் இக்காலத்தில் இக்கருத்துக்கள் மிகவும் போற்றிக் கடைபிடிக்க வேண்டியவையாகும். குறைந்த இடத்தில் எப்படி வசதியாக வாழ்வது, வீட்டுப் பொருள்களை முறையாக அழகாக அமைத்துக் கொள்வது என்பனவற்றில் இன்றைய மனையறிவியல் பெரிதும் கவனம் செலுத்தி வருகின்றது.

### வேளாண்மையும் பெண்களும்

உழவுத் தொழிலில் ஒருபகுதி வேலையைப் பெண்களே செய்து வந்துள்ளனர்; இன்றும் செய்து வருகின்றனர். கணவன் எவ்வளவுதான் திறமை உள்ளவனாக இருந்தாலும் மனைவி பொறுப்பற்றவளாக இருந்தால் விளைந்ததும் வீடு வந்து சேராது; சேர்ந்ததும் பாதுகாக்கப் படாமல் வீணாகி விடும். என்பதை

மேனா மினுக்கியைக் கொண்டவனும் கெட்டான்
மேட்டிலே பயிரிட்டவனும் கெட்டான்

ஏர் பிடித்தவன் என்ன செய்வான்?
பானைபிடித்தவள் பாக்கியம்

என்று குறிப்பிடுகின்றது பழமொழி. உழுதொழிலில் மென்மையான பணிகளை எவ்வாறு திறமையாகச் செய்து வருவாய் உள்ளதாக ஆக்கிக்கொள்ள முடியும் என்பதில் இன்று பெரிதும் முன்னேற்றம் காணப்படுகிறது. நாற்று நடுதல், களை பறித்தல், கதிரறுத்தல் போன்ற பணிகளை அன்றிக் கால்நடை வளர்ப்பு, கோழி வளர்ப்பு, பட்டுப்புழு வளர்ப்பு போன்ற வேளாண்மைத் தொழிலும் பெண்களுக்கு ஏற்ற தொழிலாகக் கொள்ளப் படுகின்றது.

## சமுதாய இயல்

உழவர் சமுதாயம் பற்றிய பல்வேறு கருத்துக்களைப் பழமொழிகள் வழங்குகின்றன, காலங்காலமாகத்தழும்பேறிப் போன வேண்டாதசில கருத்துக்களிலிருந்துவிடுபடமுடியாமல் மக்கள் தொடர்ந்து அதனையே போற்றி வருகின்றனர். அதற்குஅறியாமையும் பொருள் வசதியும் இல்லாமையுமே காரணங்களாகும். பெரிய மாற்றம் ஏற்படவேண்டுமாயின் உழவர் சமுதாயம் ஏற்றத்தாழ்வு அற்ற பொருளாதார வளம் பெற்றாலன்றி உய்யமுடியாது என்பதையே இப்பழமொழிகள் உணர்த்துகின்றன.

### தனிப் பண்ணை முறை

உழுதொழிலில் தனித்தன்மையே போற்றப்பட்டது. கூட்டுப்பண்ணைகள் நடைமுறைக்கு ஒத்துவராது என்பதை 'கூடி இருந்துபார் கூட்டுப்பயிர் இட்டுப்பார்' எனமற்றவர்கள் முடிவுக்கே விட்டுவிடுகிற பழமொழியும் 'இனக்கூட்டு ஆனாலும் நிலக்கூட்டு ஆகாது' என முடிவுக்கே வந்துவிட்ட பழமொழியும் தெளிவாக உணர்த்துகின்றன. உழவுத் தொழிலில் அவரவர் திறமைக்கு ஏற்ப விளைவு பெறப் படுவதால் கூட்டுமுயற்சி பலன் அளிக்கவில்லை. அதனாலேயே 'பொதுமாடு புழுத்து செத்தது' என மறைமுகமாகக் குறிப்பிட்டனர்.

### வருவாய் குறைந்த தொழில்

தனித்து நின்று எவ்வளவு பாடுபட்டாலும் உழவுத் தொழிலில் வருவாய் குறைவு என்பது அன்றும் இன்றும் உணரப்பட்டு வருகின்றது.

உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்கும் மிஞ்சாது
ஊண் மிச்சம் உழவில் இல்லை

என்பன இன்றும் மாற்ற முடியாத விதிகளாக இருந்து வருகின்றன. அதனாலேயே உழவுத் தொழிலை வணிகத் தொழில்போல் வருவாய் தரும் தொழிலாக மாற்றி அமைக்க முயல்கின்றது இன்றைய அறிவியல்.

### நம்பிக்கை அதிகம்

மனிதனுக்குத் துன்பங்கள் அதிகம் ஆக ஆக அவனுக்கு வேண்டாதவற்றில் எல்லாம் நம்பிக்கை அதிகமாகி விடுகின்றது. அதனால் அவன் பருவம், விதை முதலியவற்றில் தொழில் நுட்பங்களைக் கருதாமல் நாளும் கோளும் பார்ப்பதில் முனைந்து விடுகின்றான்.

ஆழ உழுது அரும்பாடு பட்டாலும்
பூமி விளைவது புண்ணிய வான்களுக்கே.

சனிப் பயிர் சாத்திரத்திற்கு உதவும்

என்பனவாகிய பழமொழிகள் அழுத்தமான நம்பிக்கையில் எழுந்தவையே. அதனால் இன்று ஆழ உழுதும் சனியன்று நட்டும் விளைவை எடுத்துத் தவறான நம்பிக்கைகளைப் போக்க முனைகிறது அறிவியல்.

### சில குறைபாடுகள்

உழவுத் தொழில் செய்ய குறிப்பிட்ட சாதியினரே சிறந்தவர் என்ற மனப் போக்கும், பிற சாதியினர் பயிர் செய்தால் பயன் விளையாது என்பதும், உழவுக் கூலிகளை கூலியில் ஏமாற்றினால் அவர்களும் வேலையில் ஏமாற்று வார்கள் என்பதும், கடன்பட்டுப் பயிரிடக் கூடாது என்பதும் ஆன சில மனப்போக்குகள் தவிர்க்கப்பட வேண்டியவை, அல்லது ஆராய்ந்து களையப்பட வேண்டியவையே.

மேழிக்குடையவன் வெள்ளாளனே

செட்டுக்கு வெள்ளாமை சென்மப்பகை

ஆண்டைக் கூலியைக் குறைத்தால்
சாம்பன் வேலையைக் குறைப்பான்

கடன் வாங்கிப் பயிரிட்டவனும்
மரமேறிக் கைவிட்டவனும் ஒன்று

### சமூக அறிவியல்

முன்னர் இருந்த நிலைகளுக்குக் காரணம் என்ன? இன்று அவற்றை எவ்வாறு மாற்றி அமைத்து மக்களை வள மாக வாழச் செய்யலாம்? என்று தீவிரமாக ஆராய்ந்து முடிவு காண வேண்டுவது இன்றைய தலையாய கடமையாகும். எவ்வளவு தொழில்நுட்பங்கள் பெருகினாலும் மக்களின் மனம் மாற்றம்பெறவில்லையாயின் அவற்றால் பயனில்லை.

### இன்றைய நிலை

கூட்டுறவு முறைகளும், வேளாண் தொழில் நுட்பங்களும், பூச்சி மருந்துகளும் பிறவும் அறிவியல் தந்த பயன் என்றாலும் அவற்றை முழுமையாகப் பயன்படுத்தச்

செய்ய வேண்டுவது இன்றியமையாததாகும். அவர்கட்கு அடிப்படையான தொழில்நுட்ப அறிவு வாய்க்குமாறு செய்ய வேண்டும். இன்றைய சிக்கல்களுக்குத் தீர்வு காண பழமொழிகள், குறிப்பாக உழவர் சமுதாயம் பற்றிக் குறிப்பிட்டுள்ள பழமொழிகள் பெரிதும் உதவும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

## ஒட்டுப் பழமொழிகள்

வேளாண் சொற்களைக் கொண்டு வேளாண்மைக் கருத்துக்களை அன்றி வேறு ஒரு பொருளையும் விளக்கி நிற்பது ஒட்டுமொழிகள் ஆகும். இத்தகைய பழமொழிகளில் வேளாண்மைக் கருத்துக்களைவிட அவற்றின் வெளியே தொக்கி நிற்கும் கருத்துக்களே சிறபுப் பெற்று விளங்கும். பயன்படுத்தும் இடத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்பப் பொருளின் ஆழமும் அகலமும் விளங்கும். ஆதலின் இவற்றை வேளாண் பழமொழிகள் என்பதைக் காட்டிலும் ஒட்டுப்பழமொழிகள் என்பதே பொருந்தும்.

தானே கனியாததை தடிகொண்டு அடித்தால் மட்டும் கனியுமா?
கொடிக்குக் காய் பாரமா?
கோழி மிதித்து குஞ்சு முடமாகுமா?
கொட்டிகொட்டி அளந்தாலும் குறுணி பதக்கு ஆகாது

என்பன ஒட்டுமொழிகள். தானே உணர்ந்து செயல் படாதவன் பிறர் சொல்லியா கேட்கப் போகிறுன்? எத்தனை பிள்ளைகள் இருந்தாலும் பெற்றவர்கள் அவர்களைப் பாரமாகக் கருதமாட்டார்கள் எனும் பொருள் கொண்ட இவை வேளாண்மையை விளக்குவதைக் காட்டிலும் சமுதாய நோக்குடையவை என்பது அறியத்தக்கது.

## வேளாண்மை உவமைகள்

பழமொழிகள் முழுமையான பொருள் தருவது. உவமைகள் முழுமையான பொருள் தருபவை அல்ல.

அதனால் பழமொழிகளை ஆய்ந்த அறிஞர்கள் உவமைகள் பழமொழிகள் அல்ல என்பதைக் குறிப்பிட்டுள்ளனர். ஒட்டு மொழிகள் போலவே வேளாண்மை உவமைகளும் இடத்திற்கு ஏற்ப வேறுபொருளை விளக்கி நிற்கின்றன.

காலத்தில் பெய்த மழை போல
ஆடு தழை தின்பதுபோல
எலுமிச்சம் செடிக்கு எருப்போட்டாற்போல
ஆட்டுக்கிடையில் ஓநாய் புகுந்ததுபோல
நடு உழவிலே நத்தை தெறித்தாற்போல

எனும் உவமைகள் இடத்திற்கு ஏற்ப பயன்படுத்தி உரிய பொருளை உணர்த்த வேண்டும். 'நடு உழவிலே நத்தை தெறித்தாற் போல' என்பதற்குப் படைச்சாலுக்குள் விதை சீராக விழுந்துள்ளது போல அவன் செய்யும் செயல்கள் செம்மையாக இருக்கும் என்பது பொருள். அதனால் இதுவும் வேளாண்மையை விளக்கவில்லை என்பது தெளிவு.

## உலகப் பழமொழிகள்

தமிழ்நாட்டு வேளாண்மைப் பழமொழிகளைப் போலவே, இந்திய நாடு, உலக நாடுகள் ஆகியவற்றின் வேளாண்மைப் பழமொழிகளை மேம்போக்க ஆராயும் பொழுதே அடிப்படையான இரண்டு உண்மைகளைப் புலப் படுத்துகின்றன. உழுதொழிலைப் பொறுத்த அளவில் உழவ னின்நேரடிப் பார்வையே மிகச் சிறந்தது என்பது ஒன்று. மற்றொன்று தனிப் பண்ணை முறையே போற்றப்படுவது. இக் கருத்துக்களை அறிவியல் நோக்கில் ஆராய்ந்து பயனுள்ள வற்றை நிறைவேற்றவும் வேண்டும்.

உடையவன் பார்வையில் பயிர் வளரும் (கங்கேரி)
உடையன் இல்லாத நிலம் அனாதைக் குழந்தை (ரஷ்யா)
உடையவன் கால் தடங்களே வயலுக்குச் செழிப்பளிக்கும் (செர்மனி)
கூட்டாக உள்ள வயலைக் கரடிகள் அழிக்கும் (அமெரிக்கா)

அரை ஏக்கரில் அதிகம் விளையும் (ஸ்காட்லாந்து)

பொது மாடு புழுத்து செத்தது (இந்தியா)

இப் பழமொழிகள் வேளாண்மைச் சமுதாயத்தின் அழுத்தமான உணர்ச்சிகளைப் புலப்படுத்துகின்றன,

## புதுமொழிகள்

பழமொழிகள் போல் இனிப் புதுமொழிகள் தோன்றுமா என்றால் வாய்ப்பு இல்லை என்றுதான் குறிப்பிட வேண்டும். இன்றைய அறிவியல் உலகில் நாளும் புதுமைகள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன, எதுவும் நிலைத்து நிற்பதில்லை. ஒன்றைப் பற்றிய அனுபவம் வெளிவருவதற்கு முன் அடுத்த ஒன்று தோன்றி விடுகின்றது. அதனால் விளம்பரங்களாக சில அழகுத் தொடர்கள் தோன்றுதற்குரிய வாய்ப்பு உள்ளனவே அன்றி அவை பழமொழிகளாக நிலைத்து நிற்பதற்குரிய வாய்ப்பு இல்லை. அவை பழமொழிகளும் அல்ல

இன்றைய விளம்பர உலகில் பழமொழிகளின் அமைப்பைப் பயன்படுத்தி புதிய மொழிகளை உருவாக்கி புதிய இரகங்கள், புதிய உழவியல் முறைகள், புதிய உரங்கள், புதிய மருந்துகள் ஆகியவற்றை அறிமுகப் படுத்தலாம். தகவல் அறிவிக்க இம்முறை பெரிதும் பயன்படும்.

களரை முறிக்க வேப்பந் தழை (பழமொழி)
களரை முறிக்க ஜிப்சம் உப்பு (புதுமொழி)

உரம் ஏற்றி உழவு செய் (பழமொழி)
நிலத்தை அறிந்து உரத்தை இடு (புதுமொழி)

என்பன போன்ற புதுமொழிகளை உருவாக்கிப் பயன் படுத்தலாம்.

*ஆராய்க*

பழமொழிகள் மனித சமுதாயத்திற்குக் கிடைத்த அரிய செல்வம். செல்வத்தைப் பாதுகாக்கவும் வேண்டும், அதனைப் பயனுள்ள வகையில் பயன்படுத்தவும் வேண்டும்.

இவ்விரண்டு வகையான பணியும் தொடர்ந்து நடைபெறு மாயின் இன்றைய சமுதாயத்தில் அவிழ்க்க முடியாத பல சிக்கல்களை அவிழ்க்கவும் முடியும்; அவிழ்த்த பிறகு அவற்றில் இருந்து புதியவற்றை ஆக்கவும் முடியும். அதனால் வேளாண்மை அறிஞர்கள் இத்தகைய ஆய்வினை ஒரு பொதுத் தொண்டாகக் கருதி ஆராய வேண்டும்.

பொதுத் தொண்டிற்கு வரையறை ஏது? அதற்கு விலை மதிப்புதான் ஏது?

மேழிச் செல்வம் கோழை படுமோ?

# வேளாண்மைப் பழமொழிகள்

## 1. உழவுத் தொழில்

### உழவின் சிறப்பு

1. அழியாச் செல்வம் விளைவே ஆகும்
2. உழவின் மிகுந்த ஊதியம் இல்லை
3. சீரைத் தேடின் ஏரைத்தேடு
4. ஏர் நடந்தால் பேர் நடக்கும்
5. ஏரை இகழ்ந்தார் பேரை இகழ்ந்தார்
6. ஏற்றப் பாட்டுக்கு எதிர்ப்பாட்டு இல்லை
7. உழுதொழில் நிற்கின் மறுதொழில் நடவா
8. ஏர் ஓட்டம் இன்றித் தேரோட்டம் இல்லை
9. ஓதுவான் எல்லாம் உழுவான் தலைக்கடைக்கீழ்
10. கொழுமீதில் குடிகொண்ட குடிச்செல்வமே செல்வம்
11. தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது
12. பூமி திருத்தி உண்
13. விவசாயமோ இரசவாதமோ?
14. தொழில் இல்லாதவன் தோட்டம் செய்

### குடியும் முடியும்

15. குடி ஏற நெல் ஏற
16. குடித்தனமே துரைத்தனம்
17. குடித்தனம் செழித்தால் துரைத்தனம் செழிக்கும்

18. குடி உயர முடி உயரும்
19. செங்கோலைக் காக்கும் கோல் ஏரடிக்கும் சிறுகோலே
20. குடியானவனே; முடியானவனே?

### ஒப்பிடல் ஆகாது

21. எண்ணிப்பார் குடித்தனத்தை
எண்ணாதேபார் வெள்ளாமையை
22. எண்ணிச் செய்வது செட்டு
எண்ணாமல் செய்வது வெள்ளாமை
23. செட்டுக்கு வெள்ளாமை சென்மப் பகை

### பாவபுண்ணியம்

24. ஆழ உழுது அரும்பாடு பட்டாலும்
பூமி விளைவது புண்ணியவான்களுக்கே
25. பயிரை இட்டு பாவத்தைத் தொலை

### தொடர்ந்து செய்க!

26. அழுது கொண்டிருந்தாலும் உழுது கொண்டிரு
27. அழிவே ஆயினும் உழவே உழு
28. விதைமுதல் அகப்பட்டாலும் வெள்ளாமையை விடாதே
29. வெள்ளாமை எல்லாம் வல்லாண்மையாலே

### நம்பிக்கை கொள்

30. மண்ணை நம்பினவனும் மன்னனை நம்பினவனும்
வீண் போகான்
31. மேழிச் செல்வம் கோழை படாது

# 2. உழவர்கள்

## உழவர் கடமை

32. உழுதவன் கெட்டதில்லை
33. காடு காத்தவனும் கச்சேரி காத்தவனும் பலனடைவான்
34. கரம்பை சுற்றினால் கால் பணம்
35. இராசனுக்கு செங்கோல்
வெள்ளாளனுக்கு உழவுகோல்
36. பருத்திச் செடியும் பாலும் உள்ளவனுக்குப் பஞ்சமில்லை
37. உழவற உழுதவன் ஊரில் பெரியவன்
38. வித்தும் ஏரும் உளவாய் இருப்ப
எய்த்தங்கு இருக்கும் ஏழையும் பதரே

## உழவர்க்கு ஆகாதன

39. உழுகின்ற காலத்தில் ஊர்வழிப் போனால்
அறுவடைக் காலத்தில் அரிவாள் தேட வேண்டாம்
40. உழுகின்ற நாளில் ஊர் சுற்றப் போனால்
அறுக்கின்ற நாளில் ஆள் தேட வேண்டாம்
41. ஈருரில் உழுதவனும் கெட்டான்
இரண்டு பெண்டாட்டி கட்டினவனும் கெட்டான்
42. பேரூர் குடியிருப்பும் சித்தூர் வெள்ளாமையும்
43. உழவன் சோம்பின் உழக்கும் காணான்
44. பரப்பன் பயிரிழந்தான், இரப்பன் பெண்டிழந்தான்

## நட்டமும் வரும்

45. ஊண் மிச்சம் உழவில் இல்லை
46. உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்கும் மிஞ்சாது

47. உழுகின்றவன் கணக்குப் பார்த்தால்
உழக்கோலும் மிஞ்சாது

48. உழுபவன் கணக்குப் பார்த்தால்
தாத்துக்கோலும் மிஞ்சாது

49. பத்து ஏர் வைத்துப் படைமரமும் தோற்றேன்
எத்தனை ஏர் வைத்துக் கோவணமும் தோற்றாய்?

50. தோட்டக்காரன் வாழ்வு காற்றடித்தால் போச்சு

## நேரடிப்பார்வை வேண்டும்

51. தான் ஏற நீர் ஏறும்

52. தான் ஏறி விளையுமல்லாது நீர் ஏறி விளையாது

53. பாராதே கெட்டது பயிர்
ஏறாதே கெட்டது குதிரை
கேளாதே கெட்டது கடன்

54. உழவின்றி ஊதியமில்லை, உடையவன் இருந்தக்கால்

55. தன் ஆள் இல்லாத வெள்ளாமையும்
தான் உழாத நிலமும் தரிசு

56. உடையவன் பாராப்பயிர் ஒரு முழம் கட்டை

57. ஆள் இல்லாப் பண்ணையம் அரைப் பண்ணையம்

58. பத்துக்குப் பின் பயிரு

59. வயல் முயற்சியால் தானியம் உண்டாம்

60. வரப்பே தலகாணி வாய்க்காலே பஞ்சு மெத்தை

## நிலக்கூட்டும் வாரமும்

61. கூடியிருந்து பார், கூட்டுப் பயிரிட்டுப்பார்

62. இனக்கூட்டானாலும் நிலக்கூட்டு ஆகாது

63. கொண்டு வாரம் கொடுத்தவனும்
உழுது வாரம் கொடுத்தவனும் கடைத்தேற மாட்டான்

64. கடன் வாங்கிப் பயிரிட்டவனும்
மரம் ஏறிக் கைவிட்டவனும் ஒன்று

65. வாரமோ கோரமோ
குடியானவன் மேழியின்கீழ் திருடன்

66. ஓதுவார்க்கு ஊருமில்லையா,
உழுவர்க்கு நிலமும் இல்லையா?

## உழவுக் கூலிகள்

67. சேற்று முகத்தில் சிரிப்பு, நெல்லு முகத்தில் நெருப்பு

68. கூத்தாடி பார்ப்பது கிழக்கு
கூலிக்காரன் பார்ப்பது மேற்கு

69. பண்ணடி படியில் எய்தனே, ஆள் நடையில் எய்தனே

70. ஆண்டைக் கூலியைக் குறைத்தால்
சாம்பான் வேலையைக் குறைப்பான்

## அரசும் கணக்கும்

71. அடிக்கடி அரசன் பிரவேசித்த கிராமம்
அருபத்தை அடையும்

72. அரசனோடு பகைத்த குடிகள் கெட்டுப் போகும்

73. கொல்லைக்காரன் பாவம் புள்ளிக்காரன் கண்ணிலே

## உழவுத் தொழிலுக்கு உரியவர்

74. மேழிக்குடையவன் வெள்ளாளனே

75. வைசியர்களில் பூவைசியர் சிரேஷ்டம்

## உழுதொழில் செய்யாதார்

76. ஏழைப்பட்ட பார்ப்பானும் மேழித்தொட்டுப் பார்க்கான்

77. பார்ப்பார் பண்ணையம் கேட்பாரில்லை

78. செட்டுக்கு வெள்ளாமை சிறக்காது

79. பறையன் பயிரிட்டுப் பழங்கலமேறுவதில்லை

# 3. நிலவளம்

## நிலத்தின் பெருமை

80. பிள்ளை பிறக்கும் பூமி பிறக்காது
81. நிலநலத்தால் விளையும்
82. நிலத்திற்குத் தகுந்த கனியும்
    குலத்திற்குத் தகுந்த குணமும்
83. பொன்னை வித்துத் தின்னு;
    மண்ணை வைத்துத் தின்னு

## ஒரே இடத்தில் நிலம்

84. கச்ச நிலமானாலும் கைசேர்க்கை
85. புறணியாலும் பொருள் சேகரம் நலம்
86. புஞ்சையானாலும் பலம் சேர
87. உழவும் தரிசும் ஒரே இடத்தில்

## நிலத் தேர்வு

88. உத்தரத்தின் பிள்ளையும் ஊரோரத்தில் வயலுஞ்சரி
89. வழியோரத்துப்புலம், துரவோரத்துப்புலம்,
    மேட்டோரத்துப்புலம், ஊரோரத்துப்புலம்,
    இவைகள் நன்றாய் விளையும்

## தவிர்க்கப்பட வேண்டிய நிலம்

90. ஊரோரம் கழனி உம்மலுக்குத் தந்தேன்
91. ஊரோரத்தில் கொல்லை உழுதவனுக்குப் பயிரில்லை
92. வயலோரம் கழனி வைக்கலுக்குத் தந்தேன்
93. ஆற்றையடுத்த வயலும் அரசனைப் பகைத்த குடியும்
    முன்னுக்கு வராது

94. ஆற்ரேரத்தில் ஒரு செய்யும் அஸ்த நட்சத்திரத்தில் ஒரு பிள்ளையும்

95. உள்ளூர்ப் பெண்ணும் அயலூர் மண்ணும் ஆகாது

96. மேனிமினிக்கியைக் கொண்டவன் கெட்டான்
மேட்டிலே பயிரிட்டவன் கெட்டான்

## பள்ளமான பகுதியே சிறந்தது

97. வெள்ளமே போனாலும் பள்ளமே விளையும்

98. வெள்ளமேயானாலும் பள்ளம் பார்த்துப் பயிர் செய்

99. காடுவெட்டி நஞ்சை பண்ணு
மாடுகட்டி வைகோல் போடு

## நன்செய் நிலம்

100. ஒருக்கால் புஞ்சை இருக்கால் நஞ்சை.

101. ராஜ வரும்படியோ, நஞ்சை வரும்படியோ

102. பார்த்துக் கெட்டது புஞ்சை
பார்க்காமல் கெட்டது நஞ்சை

## புன்செய்

103. புஞ்சையில் புதிசு; நஞ்சையில் பழசு

104. மலையடி புஞ்சை; மதகடி நஞ்சை

105. மலையடி கெட்டாலும் மதகடி கெடாது

106. மதகடி பாழானாலும் மலையடி பாழாகாது

107. கடைமடை பள்ளத்துக்கு முதல்மடை மேடு நலம்

108. கடைகோடி தரவு நிலத்துக்கும்.
கரையடி மேட்டு நிலம் எளிது

109. கொல்லைப் பயிரோ, கொள்ளைப் பயிரோ?

## செடியைக் கொண்டு நிலத்தை அறிதல்

110. ஆரைபற்றிய நஞ்சையும் அருகுபற்றிய புஞ்சையும் நலம்

111. நன்னிலங் கரந்தை; நடுநிலங் கொளிஞ்சி

112. ஆரைபற்றிய நஞ்சை, அருகுபற்றிய செவ்வல்
கோரை பற்றிய கரிசல்

### கரிசல் நிலம்

113. காணி தேடினும் கரிசல் தேடு

114. கரிசல் நிலத்தில் காக்கும் ஈரம்

115. கரிசல் காட்டு வெள்ளாமைக்கு
காலம் பூரா மானம் பாப்பு

### களர் நிலம்

116. அளர் உழுதவன் ஆண்டான், மணல் உழுதவன்
மாண்டான்

117. களரை நம்பிக்கெட்டவனும் இல்லை
மணலை நம்பி வாழ்ந்தவனும் இல்லை

118. உவர் நிலத்திட்ட விரையும் சமரிடத்தில் சென்ற
சேனையும் இரண்டாம் பட்சம்

119. களர் நிலத்தை உழாதே! கடும்பகைட்யில் போகாதே!

### களர் நிலத் திருத்தம்

120. களர்கெட பிரண்டை புதை

121. களர் முறிக்க வேப்பந்தழை

122. உவட்டை மாற்றிட வேப்பம் புண்ணாக்கிடு

123. ஒரு கல விரையடி உவட்டை மாற்றிட
அறுபல வேப்பம் புண்ணாக்கை விதையுடன் இடு

124. மண்ணைத் திருத்தி பொன்னைப் பெருக்கு

### உழ வேண்டாத நிலம்

125. மணல் உழுது வாழ்ந்தவனும் இல்லை,
மண் உழுது கெட்டவனும் இல்லை

126. கல்லுப் பிரளாத காடே உழு,
சொல்லுப் பிரளாதவனிடமே பேசு
127. உள்ளதைக் கொண்டு நல்லதைப் பயிர்செய்

## 4. வேலிகள்

*வேலியின் இன்றியமையாமை*

128. அடைத்தவன் காட்டைப் பார்
மேய்த்தவன் மாட்டைப் பார்
129. வேலிவைத்துக் காப்பாற்ருத கன்னும்
ஆலை வைத்து ஆட்டாத வாணியனும் சரியல்ல
130. தம்மினம் தம்மைக் காக்கும் வேலி பயிரைக் காக்கும்
131. அடைப்பில்லாக் காடும் விடுப்பில்லா ஏரும்
132. ஒரண்டைக்காடு காடுமல்ல, ஓரேர் உழவு உழவுமல்ல

*எப்போது வேலியடைப்பது?*

133. விரைப்பதுமுன் வேலி அடை
134. பயிரிட்டு வேலி கட்டாதே
135. விதை விதைத்து வேலி அடை
136. காட்டை விதைத்துக் கதவை அடை

*சிறந்த வேலி*

137. கள்ளி வேலியே வேலி, கரிசல் நிலமே நிலம்

## 5. மழை வளம்

*மழையின் சீர்மை*

138. மழைப்பேறும் பிள்ளைப்பேறும் மகாதேவனுக்குந் தெரியாது
139. மழை பேய்ந்த இடத்திலே, மாடு மேய்ந்த இடத்திலே

140. மாரியல்லது காரியமில்லே
141. வானம் பொழியவேணும் பூமி விளையவேணும்
142. விண்பொய்த்தால் மண்பொய்க்கும்
143. வானம் சுருங்கில் தானம் சுருங்கும்
144. மானம் பார்த்த சீமைக்கு மழைபேய்ந்த நாள் நல்ல நாள்
145. மழைமுகங் காணுத பயிரும் தாய்முகங் காணுத பிள்ளையும்
146. மேகஞ் சஞ்சரித்தால் பயிர்கள் நிழலாகும்
147. பெருமழை விழுந்தால் குளிராது.
148. மாச மும்மாரி பெய்தால் முப்போகம் விளையும், மாசம் ஒரு மாரி பெய்தால் இருபோகம் விளையும், மூன்று மாசத்துக்கொருமாரி பெய்தால் ஒரு போகம் விளையும்
149. விட்டுவிட்டுப் பெய்கிற மழையிலும் விடாமல் பெய்கிற தூவானம் நல்லது
150. காலமறிந்து பெய்யாத மழையும் நேரமறிந்து உண்ணுத ஊணும் சரியல்ல
151. விடாது மழை பெய்தால் படாதபாடு படவேண்டும்
152. அழுகைத் தூத்தல் அவ்வளவும் பூச்சி

வானவில்

153. அகல வட்டம் பகல் மழை
154. சூரியன் கோட்டை சாமம் தருமே
155. அந்திக் கிழக்கு அதிகாலே மேற்கு கொரடுபோட்டால் வராத மழை வரும்
156. மாரி மருந்து வில்லும்போட்டால், ஏரிதெறிக்க மழைபெய்யும்
157. மேல்தலே வில்லு கீழ்தலே மழை

158. கீழ்தலை வில்லு மேல்தலை வெள்ளம்

159. குடத்திலே கொரடு போட்டால்
கம்பிலே கழுதை மேயும்

160. ஆனி ஆடி அவ்விருதிங்களில், கூனி வில் குணதிசை
தோன்றிடில் பாணியாமலே மாடுவில் ஆடுகொள்,
தானியம் பல தேடு தற்காலமே

161. ஆடி ஆவணியில் கிழக்கு வில்பூண்டால் பஞ்சமுண்டு

162. ஆனி ஆடியில், ஆன செவ்வாயில், கொம்பிலே
கொரடுபோட்டால் கம்பிலே கழுதை மேயும்

163. ஆனிமாதம் கொரடு போட்டால் அடுத்த மாதம்
மழையற்றது

164. புரட்டாசியில் வில்போட்டால் உணவற்றுப் போகும்

165. சுவாதியில் வில் போட்டால் சொன்னபடி மழை

## மேகம்

166. காச் செம்மானம் காலத்திலும் மழையில்லை

167. ஆஸ்வீதச் செம்மானம் அடைமழைக்கு லட்சணம்

168. அந்திச் செம்மானம் அழுதாலும் மழை இல்லை

169. காலைச் செம்மானம் கடுக மாரி

170. காலைச் செம்மானம் கடலுக்குப் பெய்யும்

171. அந்திச் செம்மானம் அப்போதே மழை

172. காலை மோடமும் கழுதை வாடையும்
மாலைத் தென்றலும் மழையில்லை

173. பம்மலும் தூற்றலும் பருவமழைக்கு அடையாளம்

174. அடிவானம் கருக்கினல் அப்போதே மழை

175. கீழ்வானம் கருக்க, கருதிய மழையே

176. ஆகாயம் மணற்கொளித்திருந்தால்
அடுத்தாற்போல் மழை

177. மாரி அடைக்கில் ஏரி உடைக்கும்

178. மாரி மூலையில் மழைக்கருத்தால் மழைக்கு லட்சணம்

179. தெற்கு வெறித்தால் தேசம் வெறிக்கும்

180. கலையும் அப்பைக்கண்டு கட்டியிருக்கிற விதையை
வட்டிக்கு விடு

181. ஆடிக் கருவழிந்தால் மழை குறைந்துபோம்

182. காலை உப்பலும் கடுந்தனி வெய்யிலும்
மாலை மேகமும் மழைதனில் உண்டு

183. காலை மேகமும் கடுந்தனி வெய்யிலும்
மாலை உப்பலும் மழைதனில் இல்லையே

## காற்று

184. தென்றலும் வாடையும் சிறக்கும் பயிர்கள்

185. தென்றல் முற்றில் பெருங்காற்று

186. குழறியடிக்குங் கர்ற்றுக்குக் கைமேல் மழை

187. கடுங்காற்று மழை கூட்டும்
கடுஞ்சிநேகம் பகை கூட்டும்

188. வட காற்றடிக்க வந்தது மழையே

189. வடந்தை அடித்தால் தொடர்ந்து மழைபெய்யும்
தென்றலடித்தால் மழை தெரிபட்டுப்போம்

190. கச்சானுக்கு மச்சான் மழை

191. ஆடித்தேரி கோடிப்பணம்

192. ஆடித் தென்றல் நாடுநடுங்கும்

193. மாரித் தென்றல் அடித்தால்
மாட்டை விற்று ஆட்டை வாங்கு

194. ஆடி கீழ்க்காற்றும் அற்பிசி மேல் காற்றும் அடித்தால்
அவ்வாண்டும் இல்லை, மறு ஆண்டும் மழையில்லை

195. ஆடி கீழ்க்காற்று, அற்பசிமேல்காற்று, அண்ணனிட்ட
பயிரும் தம்பியிட்ட பயிரும் ஒன்று

196. ஆவணி கீழ்காற்றும், அற்பசி மேல்காற்றும் அடித்தால் சொப்பனத்திலும் மழை இல்லை
197. ஆவணி இலை அசைய, காவேரி கரைபிரள
198. அற்பிசி மேல்காற்றுக்கு அப்பவே மழை
199. மூலக்காற்று புழுவிழும்

*பூச்சிகள்*

200. தும்பி பறந்தால் தூரத்தில் மழை
201. வெள்ளை வண்ணாத்திப்பூச்சி மிச்சமானால் வெள்ளம் சாஸ்தி
202. ஈசல் பறந்தால் மழை மாறும்
203. காலை செல்பூத்தால் அடுத்தமழை அடங்கும்
204. அந்தி ஈசல் பூத்தால் அடைமழைக்கு லட்சணம்
205. எறும்பு ஏறில் பெருப்புயல் வரும்
206. எறும்பு முட்டைகொண்டு திட்டையேறின் மழை பெய்யும்
207. தட்டான் பறந்தால் கிட்டமழை
208. தட்டான் தாழ தட்டாத மழை
209. தட்டான் உயர காரும் கட்டும்
210. மாலைக்கொசுக்கடி மழையைக் கொண்டுவரும்
211. தவளை கத்தினால் தானே மழை
212. மாடுமயங்கி மானம்பார்த்தால் மழைபெய்யும்
213. கொக்கு மேடேறினால் மழை பெய்யும்
214. நண்டு ஊர நாடு செழியும்
215. நாகைபழுத்தால் நாடு செழிக்கும்
216. பொங்குங்காலம் புளி, மங்குங்காலம் மா

*மின்னல்*

217. மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை

218. ஈசானிய மின்னலுக்கு எருதும் நடுங்கும்

219. கொடிக்கால் மின்னல் விடியற்கால மழை

220. ஈழமும் கொங்குமெதிர்த்து மின்னினுல்
குட்டியை எடுத்துக் கூடையில் போடு

221. ஈழமும் கொங்கும் எதிர்த்து மின்னுவது
பள்ளத்திலிருக்கிற குடிலே மேட்டில் போடு

222. ஆனிமாதம் அடிமின்னலேப் பார்த்து பட்டறை திற

223. அற்பிசிமாதம் ஆருந்தேதி அடிமின்னல் பார்த்து
பட்டறை திற

224. சோதி மின்னிடில் சோறு அகப்படும்

## இடி

225. குலேக்கிற நாய் கடியாது, இடிக்கிறமானம் பெய்யாது

226. மானம் அதிர்ந்தால் மழை பொழியும்

227. கோடை இடியும் மாரி மின்னலும் மழை அதிகம்

228. மாரி இடியும் கோடை மின்னலும் மழையில்லே

229. அசுவனி கார்த்திகையில் இடி இடித்தால்
ஆறு கார்த்திகை மழையில்லே

230. சித்திரை மின்னலாகாது, மார்கழி இடிக்கவுமாகாது

231. ஆனி ஆருந்தேதி குடுகினுல் அறுபது நாளேக்கு
மழை இல்லே

232. ஆருத்திரை ஆறுக்குள் குடுகினுல் ஆறுமழை தட்டும்

233. சிங்கம் முழங்கினுல் எங்கும் பயிருண்டு.

234. ஆவணி மாதம் அஞ்சாந்தேதி சிங்கமுழக்கம்
அவ்வருசம் மழை

235. அற்பிசி ஆறில் இடித்தால் அடிப்பானே விதைக்கும்
ஆனி உண்டாம்

236. அற்பிசி மாதத்தில் இடி இடித்தால் ஆனேக்கொம்பு
முளேக்கும்

237. அற்பிசி மாதத்தில் இடி இடித்தால்
கிணற்று அடியில் அருகு முளைக்கும்

238. துலா இடிக்கிறது பிடி ஏற்றத்தை

239. கார்த்திகைக் குமுறல் கருந்தண்டு ஈன்றல்

240. சனிக்கிழமை சாயங்காலம் மழைதொடுத்தால்
பயிர்கள் பிணி தீரும்; பலன் மிகவும் உண்டாகும்

241. ஆடிபிறந்த ஐந்தாம்நாள் ஆடும் புதனேயாகில்
நாடுவிளையும் ஒரு போகம்,
நல்லவியாழன் இருபோகம்
வெள்ளிபயிர் சாவி, சனி கதிர்சாவி, ஞாயர் நாசம்

242. ஆடி ஞாயிறு ஐந்தானல் அரிசி விற்றவிலை
நெல் விற்கும்

243. ஆடி ஞாயிறு அஞ்சுபட்டால் நாடு படும்பாடு
நாயும படாது.

244. அருக்கனையும் சோமனையும் ஐம்மூன்று நாளையில்
நெருங்கி அரவம் தீண்டிடில். செருக்களத்தில்
மன்னர் மடிவார், மடியாவிடில்
அன்னம் அரிதாய் விடும்.

245, பங்குனி, ஆனி, புரட்டாசி, மார்கழியில்
பொங்கரவம் தீண்டினும் புகர்படினும்
எங்கெங்கும் பள்ளங்கள் தோறும் பயிரிடவேண்டாம்
வெள்ளம் மிகுந்து வருங்காண்

246. தெற்கேபோன வெள்ளி வடக்கே வந்ததால் மழை

247. கும்பத்து வெள்ளி குடங்கொண்டு சாய்க்கும்

248. சுவாதி சுக்கிரன் ஓயா மழை

249. மாசி மகத்தில் மகம், மதியின் தெற்கோடில்
தேசமும் நாடும் செழிக்கும்

250. கன்னிச் செய்வாய் கடலும் வற்றும்

251. மகம் விட்டோடினல் குடி கெட்டோடும்

252. கேட்டை மூட்டை செவ்வாய் ஒட்டை விற்கச் செய்யும்

253. எப்பிறை கோணினலும் தைப்பிறை கோணலாகாது
254. தைப்பிறை வடகொம்பு உயர்ந்ததால்
வடவனுக்கும் சோறுண்டு தென்கொம்பு
உயர்ந்ததால் தெருவெங்கும் திரியவேண்டும்
255. கடகச்சந்திர மழை கல்லேத் துளேக்கும்.
256. கல்லணை இடிந்தாலும் கர்க்கடக சந்திரன் விடாது
257. கார்த்திகை மாதத்து கற்கடகச் சந்திரயோகம்
கல்லேத் துளேக்கும்
258. கர்க்கடகச் சந்திரன் கல்லேத் துளேக்கும்
259. கார்மழை பெய்து கடும்பட்டம் வர
யானே போன்ற எருதும் பூனேபோல்
260. விசுக்கழிந்த மறுநாள் கொழுப்பதிய
மழைபெய்ய வேண்டும்
261. அசுவனி சர்வ நாசம்

*மழை*

262. பரணி பேய்ந்ததால் தரணி விளேயும்
263. பரணி மழை தரணியெய்லாம் பொலி

*சித்திரை*

264. சித்திரை மழைபெய்தால் பொன்னேர் கட்டலாம்
265. சித்திரைமழை சின்னப்ப டுத்தும்
266. சித்திரை மாதத்து மழை சினேயை அழிக்கும்
267. சித்திரை மாதத்து மழை சிவத் துரோகம்
268. சித்திரை பத்துக்குமேல் சிறந்த பெருங்காற்று
அற்பிசி பத்தில் அடங்கும்

*வைகாசி*

269. வையாசிமாதம் மதிகுறைந்த நாலாம்நாள்
பெய்யுமேயாகில பெருமழையாம், பெய்யாக்கால்

மாசிமறுத்து மறிகடலும் நீர்வற்றி
ஏரிக்குள் எள்ளுவிரை

270. வைகாசிமாதம் வாய்மடையில் ஏர்பூட்ட
பொய்யாமல் பூக்கும் புளி

271. ஆருத்திர கார்த்திகை பகலில் பிறந்ததால்
ஆறுகார்த்திகை மழையில்லை

## ஆனி

272. ஆனி குறுகினால் அறுபது நாளைக்கு மழையில்லை

273. ஆனி அரையாறு ஆவணி முழு ஆறு

274. ஆனி அடைச்சாரல் ஆவணி முழுச்சாரல்

## ஆடி

275. ஆடி அரை மழை

276. ஆடி வெப்பல் ஆட்டுக் கிடைக்குச் சமானம்

277. ஆடி அமாவாசையில் மழை பெய்தால் அடுத்த
அமாவாசை வரையில் மழையில்லை

278. ஆடி அமாவாசையில் மழைபெய்தால்
அரிசி விற்றவிலை நெல் விற்கும்

279. ஆடி முதல் தேதி ஆயிரம் கண்ணுடையான்
முடிமுகில் விரியானாகில் ஆழிவரண்டும்
அண்டம் புரண்டும் நாடு விளையாது நாழி

280. ஆடி அரவட்டை அகவிலை நெல்விலை

281. புப்பை பெய்தால் கதிர் விளையும்

## ஆவணி

282. ஆவணிமாதம் அழுகைத் தூற்றல்

283. ஆவணி தலைவெள்ளமும்
அற்பிசி கடை வெள்ளமும் கெடுதி

## புரட்டாசி

284. புரட்டாசி பெய்தாலும் பெய்யும்
காய்ந்தாலும் காயும்

285. பொன்னுருகக் காயும் மண்ணுருகப் பெய்யும்
புண்ணியப் புரட்டாசி

286. புரட்டாசி பெரு மழை

287. புரட்டாசி பேய்ந்து பிறக்கவேண்டும்
அற்பிசி காய்ந்து பிறக்கவேண்டும்

288. பெய்ந்தால் பேயும் புரட்டாசி
பெய்யாவிட்டால் பெய்யும் அற்பிசி

## ஐப்பசி

289. அற்பிசி அடைமழை

290. அற்பிசி மாதம் பசு கறக்குமுன்
பனிரெண்டு பாட்ட மழை

291. அற்பிசி மாதத்து வெயிலில் அன்று உரித்த தோல்
அன்றைக்கே காயும்

292. அற்பசி பனி அத்தனையும் மழை

293. சித்தை பேய்ந்தால் தேசம் பாழாம்

294. அற்பிசி மாதம் பிறையைக்கண்ட வேளாளா!
கைப்பிடி நாத்தைக்கொண்டு கரையேறு

295. அற்பிசி அடியோடே காய்ந்தால்
அண்டைப்புலம் போல் என் புலமும்

296. அற்பிசி மாதம் அறக் காய்ந்தால்
அண்ணனிட்ட பயிரும் தம்பியிட்ட பயிரும் சரி

297. அற்பிசி தலைவெள்ளமும்
கார்த்திகை கடைவெள்ளமும் கெடுதி

298. அற்பிசி மாதம் அடைமழை
கார்த்திகை மாதம் கனமழை

299. அற்பிசிக்கும் கார்த்திகைக்கும் மழையில்லாவிட்டால் அண்ணனும் தம்பியும் சரி

300. அற்பிசி மாதம் அழுகைத்தூத்தல் அவ்வளவும் பூச்சி

## கார்த்திகை

301. கார்த்திகை கனமழை

302. கார்த்திகை மாதம் கலங்கழுவ மழைவிடாது.

303. கார்த்திகை மாதத்து மழையில் கல்லுக்குள்ளிருக்கும் புல்லும் கதிராகும்

304. காய்ந்தால் காயும் கார்த்திகை

305. கார்த்திகைப் பிறைகண்ட வேளாளா!
கைநாத்துடன் கரையேறு

306. கார்த்திகைக் கண்டு கலம் வில்லு

307. கார்த்திகை மாதம் கால்நாழிகைப்
பொழுதிருந்தாலும் காற்றடிக்கும்.

308. கார்த்திகைக்குப் பிறகு கால்கோடை

309. கார்த்திகைக்கு அப்பால் மழையுமில்லை
கர்னனுக்கு அப்பால் கொடையுமில்லை

310. விளக்கிட்டால் மழை கிழக்கிடும்

311. மூலமழபெய்தால் நவதானியத்துக்குக் கேடு

## மார்கழி

312. மார்கழி மத்தியில் மாரிபொழிந்தால்
சீரொழுகும் பயிர்களுக்கு சேமமிக உண்டாகும்

313. மார்கழி பிறந்தால் மழையுமில்லை
பாரதம் முடிந்ததால் படையுமில்லை

314. மார்கழி மழை மண்ணுக்கு உதவாது

315. மார்கழிக்கோடை மரம்வெட்டிச் சாய்த்தாற்போல்

## தை

316. தை மழை நெய் மழை
317. தை பிறந்ததால் தலைக்கோடை
318. தை பிறந்தது தரை வறண்டது
319. தை ஈனுப் புல்லுமில்லை மாசி ஈனு மரமுமில்லை
3.20 தை வெள்ளம் தாய்க்குச் சோறு

## மாசி

321. மாசிப்பனி மச்சைத் துளைக்கும்
322. மாசி மின்னல் மரம்தழையும்

## பங்குனி

323. பங்குனி மழை பத்துக்கும் நட்டம்
324. பங்குனி மாதத்தில் மழைபெய்தால்
பத்து எட்டு சேதம்
325. பங்குனி மழை பெய்தால் பலனெல்லாம் சேதம்

## காலையும் மாலையும்

326. உதயத்தில் வந்த மழையும் அஸ்தமிக்க வந்த
மாப்பிள்ளையும் விடாது
327. அந்திமழையும் ஔவையாரைப் பிடித்த
பிணியும் விடாது
328. அந்திமழை அழுதாலும் விடாது

## பனி

329. பனிகண்ணடைத்தால் மழைகண் திறக்கும்
330. பனிபெய்ததால் மழையில்லை,
பழமிருந்ததால் பூவில்லை

331. முடுபனி பெய்தால் முந்நூறும் நாள் மழை

332. தைப்பனி தரை எல்லாம் நடுங்கும்
மாசிப்பனி மரமெல்லாம் நடுங்கும்

333. விசாகத்தில் மழைபெய்தால்
பயிர்களுக்குப் புழு உண்டாம்

334. ஈழையும் கொல்லையும் எதிர்த்து மின்னினால்
பள்ளத்தில் இருக்கிற குடிலே மேட்டிலே போடு

335. உப்புநீர் மேகம் சேர்ந்தால், உலகில் பிரவாகம்

336. வடக்கே கறுத்தால் மழைவரும்

337. வேனலுக்குக் கனமழை வரும்
வேந்தனுக்குக் கனசனம் வரும்

## 6. உழவு

### உழவின் சிறப்பு

338. ஏர்ச்சாலுக்கு எதிர்ச்சால் இல்லை

339. உழுதவன் காட்டைப்பார்;
மேய்ச்சவன் மாட்டைப் பார்

340. உழவு நட்பில்லாத நிலமும் மிளகு நட்பில்லாத
கறியும் வழவழ

341. கொழுநன் நட்பில்லாத பெண்ணும்
உழவு நட்பில்லாத பயிரும் பிரயோசனமில்லை

342. மூலைக்கரைகூட விளைந்தால் சேலைக்கு உதவும்

343. வெண்கார் புழுதிக்கு விளையாத பயிர் உளதோ?

344. புழுதி உண்டானால் பழுதில்லை.

345. உழுது அலர்ந்தது பழுதாகாது

### உழும் முறை

346. அதிர அடித்தால் உதிர விளையும்

347. வெண்ணெய்போல் உழவு குண்ணுப்போல் விளையும்
348. உழுத காலாலே உழப்பி விடு
349. உழவற உழுதால் விளைவற விளையும்
350. உழவுக் கள்ளன் இழிவுக் கள்ளன்
351. ஓடி ஓடி நூறுகுழி உழுவதைப் பார்க்கிலும்
அமர்ந்து அமர்ந்து ஆறுகுழி உழுவது நல்லது
352. ஆறுநாள் நூறுழவு உழுவதிலும்
நூறுநாள் ஆறுழவு உழுவது நலம்
353. ஆற்றப்புழுதி ஈரம்தாங்கும்
354. பசு உரத்திலும் பழம் புழுதி நல்லது

## எருவிலும் சிறந்தது

355. உழுத புழுதி உரத்திலும் மேல்
356. உழவால் பயிராகிறது எருவாலும் ஆகாது
357. ஏழுழவு உழுதால் எருப்போட வேண்டாம்
358. எருவிலும் வலியது உழவுதான் ஆமே
359. உரத்தைத் தள்ளும் உழவு
360. உழவிலும் பகை எருவிலும் தீராது
361. உழவுப் பகையானுல் எருவினுல் தீராது
362. சாண் உழவு முழு எருவுக்குச் சமம்

## ஆழ உழு

363. அடர விதைத்து அழிய உழு
364. ஆழ உழுதாக்கா அத்துபடி வெள்ளாமை
365. ஆடு வைத்தலிலும் ஆழஉழுவதே நலம்
366. ஈர்ந்து உழும் புஞ்சை ஈரம் தாங்கும்
367. தரையுள் காற்று நிறைய வேண்டும்
368. ஆழ உழுது தேடி எடு

369. தாழ உழுதால் தளிரோடும்
370. அகல உழுவதை ஆழ உழு
371. ஆழ உழுவது நீர் ஆவியைக் குறைக்கும்
372. ஆழ உழுதாலும் அடுக்க உழு
373. பாரின் ஆழம் வேரின் ஆழம்
374. மேலைக்கு உழுவார், கூழுக்கு அழுவார்
375. காரைக் கண்டு ஏர் உழு
376. பணியை நம்பி ஏர்கட்டி அலுத்தான்
377. ஈரநிலத்தில் ஏரைப்பிடி
378. புழுதி உலர்ந்தால் உழுமுதல் காணாது
379. உழவு உழுது காய்ந்தால் வித்திரட்டி காணும்
380. கம்மல் உழவு கெடைச்சா அம்புட்டும் வெள்ளாமை

உழும் பருவம்

381. சித்திரைப் புழுதி பத்தவும் நன்று
382. சித்திரைமாதம் புழுதி பத்திர மாத்துத் தங்கம்
383. கார்த்திகை மாதத்தில் உழுதால்
கடுகு மிளகுக்கும் காணாது
384. பூரணந்தன்னில் புலையனும் உழான்
385. தை உழவு ஐயாட்டுக் கிடை
386. தை உழவோ நெய் உழவோ

ஏரும் எருதும்

387. காளையைக் கட்டி காருழவை ஓட்டு
388. மூரி எருத்தினுழவு இன்னாது
389. முன்னேர் மாட்டை முகத்தில் அடியாதே
340. கழுதை உழுது கம்பு விளையுமா?
341. உழவிற்கு ஏற்ற கொழு
342. கார் அடித்தால்தான் கலப்பை உழும்

393. எட்டுழவு உழுதாலும் கட்டைக்குத் தகாது

394. மண்ணைப் புரட்டும் பண்ணைக் கலப்பை

395. நாட்டுக் கலப்பையால் நான்குமுறை உழு

396. கொம்பால் உழுது குண்டியால் மரமடி

397. கையைப் பார்த்துக் கலப்பையை வெட்டு,
காலைப் பார்த்து மேழியைவெட்டு

398. எடுப்புண்ட கலப்பை இருந்துண்டு உழாது

உழவின் அளவு

399. புல்அற உழு

400. பூண்டைப் போக்கல் வேண்டும் உழவினால்

401. புல்லற உழுதால் நெல்லற விளையும்

402. பயிர்வகைப் பொறுத்து புழுதிப் படுத்து

403. நஞ்சைக்கு ஏழுழவு; புஞ்சைக்கு நாலுழவு

404. ஏழுமடிப்பு உழுதபுலமும்,
ஏழு உலர்த்து உலர்த்தின விரையும்
எழுபதுநாள் காச்சல் தாளும்

405. புழுதியில் வேர்கள் சடுதியில் இறங்கும்

406. மாரிபேரில்லாத பயிரும் வளமறியாதகுடியும் சமம்

407. ஒரு ஏர்க்காரன் உழுதுகெட்டான்
நாலு ஏர்க்காரன் நிறுத்திக்கெட்டான்
பத்து ஏர்க்காரன் பார்த்துக்கெட்டான்

408. வேலி ஒன்றுக்கு ஈரிணை மாடும்
இரண்டு ஆளும் வேண்டும்

409. ஆழவெட்டி தாழப் புதை

410. ஒன்று கட்டிவிதை, ஒன்று வெட்டி விதை

411. வித்தை விதைக்குமுன் பக்குவப்படுத்து

### உழுவோர் நிலை

412. கஷ்டத்துக்குத் தக்ககூலி
வெட்டினதுக்குத் தக்கவிளைச்சல்

413. போடுகாலில் தேடிப்போடு

414. அமிஞ்சிக்கு உழுதால், சரியாய் விளையுமா?

415. உண்பாரைப் பார்த்தாலும் உழுவாரைப் பார்க்கலாகாது

416. உழுகிறதைவிட்டு நழுவுகிறவன்,
தெய்யம் ஆடிறைற்போல

417. உழுபவனுக்கு ஊர்க்கணக்குப் பண்ணத்தெரியுமா?

418. உழுவானுக்கு ஏற்ற கொழு, ஊரார்க்கு ஏற்ற தொழு

419. ஏரை அடித்தானே, கூழை அடித்தானே

420. புழுதியைப் பார்த்துப் பெண்ணைக் கொடு

421. காலப்புழுதி இல்லாதவன் கைமுதல் இழப்பான்

## 7. எரு

### எருவின் இன்றியமையாமை

422. ஏரோட்டுவதிலும் எரு இடுதல் நன்று

423. எருக் குழையின்றி ஏர் பிடியாதே

424. ஏழுழவு உழுதாலும் எருப்போட வேண்டும்

425. எரு இல்லா வயல் கன்றில்லா மாட்டைப்போல

426. அறிவிலே விளையுமா எருவிலே விளையுமா?

427. தெய்வத்துக்குச் செய்வதும் செயக்குரம் போடுவதும் பழுதாகாது

428. எருசெய்வது இனத்தான் செய்யான்

429. குளத்தின் எருவும் குண்டைஎருவும் தாவர எருவும்
தாது எருவென நல்லஉரங்கள் நால்வகையாகும்

430. எருவும் தண்ணீரும் உண்டானல்
எந்த நிலமும் விளையும்

## உரம்

431. உரம் ஏற்றி உழவு செய்
432. உரம் உதவுவது போல் ஊரார் உதவமாட்டார்
433. எருமண மில்லாத பயிரும் நறுமண மில்லாத மலரும்
434. குப்பை யில்லா வெள்ளாமை சப்பை
435. எருசெய்வது எமை செய்யாது
436. குப்பை உயர்ந்தால் குடி உயரும்
437. குப்பையில் கோடி தனம்
438. குப்பையை மண்ணுடன் குழிகள் குமி
439. குரு இல்லாத சீடனும் குப்பை இல்லாத
நிலமும் பாழ்
440. பாயும் சலம் முழுவதும் வத்து, பழைய எருவை
எடுத்துக் கொட்டு
441. வயலுக்கு அதிபதி உரம்

## ஆட்டெரு

442. ஆடு ஊடாடாக் காடு விளையாது
443. ஆடு மிதியாக் கொல்லையும் ஆளனில்லாப்
பெண்ணும் வீண்
444. ஆடுமரித்தவன் செய்விளையுமா அங்கலாயத்தவன்
செய்விளையுமா?
445. ஆடே எரு ஆரியமே வெள்ளாமை
446. ஆடே படைப்பு ஆரியமே வெள்ளாமை
447. ஆடுமறித்த தொளியைவிட்டு ஆறினதொளியை
வாங்கு

## மாட்டெரு

448. ஆட்டுரம் ஓராண்டு நிற்கும் மாட்டுரம்
ஆறாண்டு நிற்கும்
449. ஆட்டெரு அவ்வருசம், மாட்டெரு மறு வருசம்
450. ஆட்டுரம் தன்னில் மாட்டுரம் மேல்
451. தொழுவின் நீரே பழுதிலா உரமாம்
452. கூளம் பரப்பிக் கோமயம் சேர்
453. மாட்டெரு புன்செய்க்கு, தழை எரு நன்செய்க்கு

## தழை உரம்

454. ஆடு அப்பூ, ஆவாரை முப்பூ
455. ஆடு பயிர் காட்டும், ஆவாரை நெல் காட்டும்
456. கார் ஆடு, பிசானம் குழை
457. கொளுஞ்சி பூவரசு கொளுத்த சாப்பாடு
458. காணிக்கு ஒரு கருவேலும் வேலிக்கு ஒரு மூங்கிலும்
459. பசுந்தாள் உரமே பக்குவ உரமாம்
460. தக்கைப்பூண்டு தகைமைசால் உரமாம்
461. நிலத்தில் எழுந்த பூண்டு நிலத்தில் மடிய வேண்டும்

## பிற எரு

462. சேரி எருவு எல்லா எருவைவிட சேகரம் உண்டாக்கும்
463. நரகல்தானும் நல்லெருவாகும்
464. ஆத்து மண்ணுக்கு வேத்து மண் உரம்
465. புற்றுமண் போட்டால் பூமி பலன் தரும்
466. ஆற்று வண்டல் தேற்றும் பயிரை
467. வேப்பம்புண்ணாக்கு விலையுள்ள எருவாம்
468. நிலத்தைப் பொறுத்து உரத்தை இடு
469. ஈரம் போகாமல் எருவை மூடு

470. அடுத்து உரம் எடுத்துப் போடு
471. உழுவதற்கு முன் உரத்தை நாடு
472. கொடுக்கும் எருவால் எடுக்கும் மகசூல்
473. எடுக்கும் மகசூல் ஒடுக்கும் நிலத்தை
474. அறுவடை ஆனதும் ஆற்றல் நன்று
475. எள்ளும் கரும்பும் எடுக்கும் மிகஉரம்

## 8. பருவம்

*பட்டம்*

476. பருவத்தே பயிர் செய்
477. காலத்தில் பயிர் செய்தால் கடன் வாங்க வேண்டாம்
478. காலப் பயிர் கடக்க நிற்கும்
479. பாழில் போட்டாலும் பட்டத்தில் போடு
480. பட்டத்தில் பயிருழவடி
481. காலத்து விரை கரம்பில் போடு
482. கோப்புத் தப்பினுல் குப்பையும் பயிர் ஏராது
483. பட்டம் தப்பினுல் நட்டம்
484. பாத்திரமறிந்து பிச்சையிடு
சேத்திரமறிந்து வித்தையிடு
கோத்திரமறிந்து பெண்ணைக்கொடு

*மாதம்*

485. சித்திரை மாதத்தில் சீராய் விதை விழுத்ததால்
பத்திரை மாற்றுப் பசும்பொன் அதில் விளையும்
486. ஆடிப் பட்டம் தேடி விதை
487. ஆடி மாதத்தில் விதைத்த விதையும் அய்யஞ்சில்
பிறந்த பிள்ளையும் ஆபத்துக்கு உதவும்

488. ஆடி ஐந்தில் விரைத்த விரைப்பும்
புரட்டாசி பதினைந்தில் நட்ட நடவும்
அறுநான்கில் பெற்ற புதல்வரும் இம்மூன்றும்
பெரியோர்கள் புதைத்து வைத்த தனம்

489. ஆடி பதினெட்டில் விதைக்கிற விதையும்,
ஆறு நான்கில் பிறந்த பிள்ளையும்
தேடாமல் தேடிய தனம்

490. ஆடி பதினெட்டில் விதைக்கிற விதையும்
பதினாறு வயதில் பிறக்கிற புத்திரனும்
பெரியோர்கள் தேடிய தனம்

491. ஆடிக்கொரு விதைபோட்டால் கார்த்திகைக்கு ஒரு
காய் காய்க்கும்

492. உத்தரம் பார்த்து வித்து எடு

493. சிங்கத்தில் சிதறினால் கும்பத்தில் குவிக்கலாம்

494. ஆவணி பட்டம் அழகுப்பட்டம்

495. பங்குனியில் பறையனும் பயிரிடான்.

நாட்கள்

496. வெள்ளி விதைபிடி, வியாழன் கதிர்பிடி

497. வெள்ளியில் விரைபிடி, சனியில் கதிர்பிடி

முந்துக

498. பயிருக்கு முந்தவேணும் படைக்குப் பிந்தவேணும்

499. முற்படச் செய்யும் பயிரே நன்று

500. படி விரைக்குப் பிடி விதை மூத்தது

501. மடிவிரை காய்ந்தது, பிடி விரை விளைந்தது

502. மடி விதைக்குப் பிடிவிதை முந்தி

503. விரை அகல இடு

504. அசையோ பயிர், அடப்போ குடித்தனம்

505. தாளடர்ந்ததே பயிர், ஆளடர்ந்ததே படை
506. கரைந்த பயிர் இருந்து வளரும்
507. கம்மலிட்ட பயிரும் ஒம்மலிட்ட குடித்தனமும்
முன்னுக்கு வராது

## 9. விதை

### விதையின் பெருமை

508. வித்தைப் பொறுத்து விளைவின் திறமை
509. ஆய்விதை எனினும் காய்வது நன்று
510. காய்ந்த வித்துக்குப் பழுதில்லை
511. சொத்தைப்போல வித்தைப் பேணு
512. ஓடுகள் விதையைக் கேடறக் காக்கும்

### விதைக்கும் முறை

513. பட்டம் தேடிப் பயிர்வகை விதை
514. விருட்சியில் விதையேல்
515. ஈரம்தானே பீரம் பயிர்க்கு
516. ஈர விதைப்பும் ஈரூர் வெள்ளாமையும்
தாரம் இரண்டும் தனக்குப் பகை
517. வெப்பில் விதைப்பும் வைப்பாட்டி பிள்ளையும் சரி
518. விதைகள் ஆழம் புதைவது பழுதாம்
519. அடர விதைத்து அழிய உழு
520. அடர விதைத்தால் படரும் தழைகள்
521. தெளித்த விதையை மறைத்து மூடு
522. மாற்றும் வித்து ஏற்றது பயிர்க்கு
523. கொருக் கலப்பையைக் கொண்டு விதை

## 10. நீர்ப்பாசனம்

*நீரின் சீர்மை*

524. நீரில்லாமல் பயிர் செய்யலாகாது
525. நீரைச்சிந்தினேயோ சீரைச்சிந்தினேயோ?
526. நீர்வள முண்டானல் நிலவள முண்டாகும்
527. தனேற நீரேற, நீரேற நெல்விளைய,
நெல்விளைய போரேறும்
528. எண்ணெய் காணுத மயிரும் தண்ணீர் காணுத பயிரும்
529. தண்ணீரில்லாத வெள்ளாமையும்
தானுழாத நிலமும் தரிசு
530. தானேறி விளையுமே யல்லது நீரேறி விளையாது
531. கள்ளனையும் தண்ணீரையும் கட்டிவிடு
532. முடப்புல்லும் முக்குறுணித் தண்ணீரைச் செறுக்கும்

*நீர் நிலை*

533. ஊற்றுப்பாய்ச்சல் ஆற்றுப்பாய்ச்சல் பத்துக்குழியும்,
ஏரிப்பாய்ச்சல் நூறுகுழியும் சரி
534. எருமடைக்கு நீர் பாய்ச்சாதே
535. கிணற்றைக் காத்தால் வயிற்றைக் காக்கும்
536. கிணற்றைத் தூர்த்தால் வயிற்றைத் தூர்க்கும்
537. நீரிருந்தபோதிலும் பட்டறை இறைவையிருக்க
வேண்டியது
538. புத்துக்கண்டு கிணறு வெட்டு
539. கல் உள்ளதே கிணறு, கரை உள்ளதே தோட்டம்
540. தொட்ட அனைத்தூறும் மணற்கேணி
541. இறைத்த கிணறு ஊறும், இறையாத கிணறு நாறும்
542. எமன் ஒருவனைக் கொல்வான்,
ஏற்றம் மூவரைக் கொல்லும்

543. இறைப்பெல்லாம் ஒரே விளைப்பு
544. பாய்ச்சலும் வேணும் காய்ச்சலும் வேணும்
545. நிழலுக்கு இடங்கொடுத்தாலும்
நீருக்கு இடங்கொடாதே
546. தாசில் பண்ணினாலும் பண்ணலாம்
தண்ணி மாற முடியாது
547. ஆறுநிறைய சலம் போனாலும் பாய்கிறது கொஞ்சம்
சாய்கிறது கொஞ்சம்
548. இறைக்க ஊறும் மணற்கேணி,
ஈயப் பெருகும் பெருஞ்செல்வம்
549. ஏரி பெருகில் எங்கும் பெருக்கு
550. குளத்துநீர் குன்றுப் பயிர்
551. வெள்ளம் வருமுன் அணைபோடு
552. நீர்வளம் தானும் கோல் வளமாக்கும்

## 11. களை

*கால்பயிர்*

553. களையைப் போக்கல் விளையைத் தரும்
554. களைகள் படரும் காற்றினும் புள்ளினும்
555. ஈயுந்தனையும் எருவை; காயுந்தனையும் களைபறி
556. கதிர் களைந்தும் களை பிடுங்கு
557. கிளைக்கிற போதே களையைக் கிள்ளு
558. களை யெடுக்காதான் கபோதி
559. களையெடுத்தவன் கைமுடியுள்ளவன்
560. பயிருக்குக் களையெடுத்தால் பலனை மிக அடைவார்
561. களை யெடாதவன் விளைவெட்டான்
562. களையெடுத்தால் முளை எடுக்கும்
563. வெட்டிக் களையெடுத்தால் கட்டு முக்கலங் காணும்

564. களை பிடுங்காப் பயிர் கால் பயிர்

565. கவடிருந்த நெஞ்சம் களையிருந்த பயிரும்
கடைத்தேறாது

*பல்வகைக் களைகள்*

566. கோரை குடியைக் கெடுக்கும்

567. கோரைக்கொல்லையைப் பிடித்தவனும்
மலடிப்பெண்ணைக் கொண்டவனும்
பலனடைய மாட்டான்

568. அருகுமுளைத்த கொல்லையும்
அரசரோடு எதிர்த்த குடியும் ஈடேறாது

569. அடங்காப் பெண்ணைக்கொண்டவனும் கெட்டான்
அருகங்காட்டை உழுதவனும் கெட்டான்

570. தாசி இருந்த வீடும் தாதனு முளைத்த காடும் பாழ்

571. கொல்லைக்குப் பல்லி, குடிக்குச் சகுனி

## 12. காப்பு

*விளையும் பயிர்*

572. விளையும் பயிர் முளையிலே தெரியும்

573. வளருங்காய் பிஞ்சிலே தெரியும்

574. கார்த்திகை பிறந்தால் கட்டியின்கீழ் கதிர்

575. கார்த்திகைக் கண்டு களமிடு

*எலியும் கிளியும்*

576. அறுப்புக்காலத்திலே எலிக்கு ஐந்து பெண்சாதி

577. கிழவி இருந்தவீடும் கிளி இருந்தகாடும்
ஈடேறமாட்டாது

578. கரும்புப் பக்கம் நெல் நட்டா
குருவிக்குக் காணாது வெள்ளாமை

*பூச்சியும் மருந்தும்*

579. செப்பாடு அடிச்சா எம்பாடு தீர்ந்தது
580. நெற்பயிர் அழிக்கும் நாவாய்ப் பூச்சி
581. கரும்பைக் கெடுக்கும் கரையான் பூச்சி
582. கம்பளிப்புழுப் பயிர்த் தெம்பினை வாங்கும்
583. பயிர்கள்தோறும் பகைப்புழு மாறும்
584. பகைப்புழு அழிக்கப் பக்குவம் தேடு
585. பகைப்புழு ஒழிக்கப் பயிரை மாற்று
586. புழுவைத் தின்று புள்ளினம் உதவும்
587. பனியில் மருந்தடிச்சா பருத்து வரும் நெல்லு
588. கோடையால் காய்கிற பயிர் வாடையால் தளிர்க்கும்
589. வெய்யில் வேண்டும் எவ்வகைப் பயிர்க்கும்
590. உரியவன் நோக்க உவக்கும் பயிர்கள்

## 13. நெற்பயிர்

591. நெற்பயிர் விளை
592. எள்ளுப் பயிரானாலும் நெற்பயிர் செய்
593. வெள்ளைக் களரில் விளையும் நெற்பயிர்
594. நெல்லுக்குத் தானும் பொண்ணுக்குத் தோழனும்
595. உண்ட உடலுக்கு உறுதி, உழுத புலத்தில் நெல்லு
596. நஞ்சைக்கு அழுதையோ, கஞ்சிக்கு அழுதையோ

*பயிரிடுமுறை*

597. பாடு அறிந்து பட்டால் பாழும்காடும் நெல் விளையும்
598. உழுதசேர் காய்ந்ததால் உழக்கு நெல்லும் காணாது
599. நெல்லடுவை கொள்ளடுவை யாகாது
600. நட்டன்று மழையும் கெட்டன்று விருந்தும்

601. நாலாங் கொம்புத்தண்ணீர் நஞ்சுக்குச் சமானம்

## வயல் வரப்பு

602. வரப்படி வெட்டின் விரைப்படி காணும்

603. வரப்புத்தேய வயிறு நிறையும்

604. கழனிக்கு அண்டை வெட்டிப்பார்
கண்ணுக்கு மை இட்டுப்பார்

605. கிடாக் கழுத்தைப்போல அண்டைவெட்ட

## நெல்லுக்குத் தண்ணீர்

606. மோட்டை போனால் கோட்டை போகும்

607. வரப்புயர நீர் உயரும்
நீர் உயர நெல் உயரும்
நெல் உயரக் குடி உயரும்
குடி உயரக் கோன் உயர்வான்

608. நீரைக் கண்டு நெல் விதை

609. பனி பெய்து நெல் விளையுமா?

610. நெல்லுப்பயிரும் நேருள்ளப் பார்ப்பானும் நீரின்மேல்

## நீரின் தேவை

611. வாய்க்கால் வெட்டி வயலுழு

612. பாலி நிறைய சாலி விளையும

613. மடையேறப் பாய்ச்சினால் தடையேற விளையும்

614. ஒரு ஓடு தண்ணீர் ஒரு கல நெல்லு

615. பெருகிய நீர் நெல்லுக்குப் பகையாம்

616. நீர் பெருத்தால் நெல் சிறுக்கும்

617. நீர் ஏற நெல் ஏற

618. நீர் வற்றினால் நெல் வற்றும்

619. கல்லில் ஈன வேண்டும், கசத்தில் விளையவேண்டும்

620. பாய்ச்சி அறுத்தால் பதக்குநெல் கூடக் காணும்
621. காக்கைநீர் கார் விளையாது

## நம்பிக்கை

622. நெல் விரைக்கு சனிகுறுக்கும்
செவ்வாய்குறுக்கும் ஆகாது
623. அருதி கத்திரியும் அமாவாசை நெல்விரையும்
ஆகாது
629. சனிப்பயிர் சாத்திரத்திற்கு உதவும்
630. செவ்வாய் நட்டுபுதன் அறுக்கலாகாது

## விதை அளவு

631. நடவுக்குத் தூவல் நாலத்தொரு பங்கு
632. கை விதைப்பைவிடக் கலந்த நடுகை நல்லது
633. விதைத்துப்போட்டு உற்றுப் பார்ப்பதைப்
பார்க்கிலும் நட்டுப்போட்டுச் சுற்றிப்பார்
634. வேலி ஒன்றுக்குப் பன்னிரண்டு கலம் விரைப்பாடு

## நாற்று விடும் பருவம்

635. ஆடி விரைப்பு, ஆவணி நடவு
636. ஆடிப் புழுதி, ஆவணி சேறு
637. ஆவணி மாதத்தில் நெல் விதைத்தால்
ஆனைக்கொம்பு விழும்
638. பருவத்தில் பெற்ற சேயும் புரட்டாசிப்பாதிச்
சம்பா நடுகையும்
639. அற்பிசி மாதத்தில் நெல் விதைத்தால்
அவலுக்கும் நெல்லாகாது
640. கார்த்திகை மாதத்து சாகுபடி கக்கத்தில்
வைக்கலும் கொட்டாங்குச்சியில் நெல்லுமாம்

641. சேற்ருேடு போகிறது நாற்ருேடு போகட்டும்

642. கெட்டொடிஞலும் நட்டோடு

643. அஸ்தத்தில் நாத்துவிடு

## நாற்று நடும் காலம்

644. ஆடி அரணை வால் ஒத்த கரும்பும்,
ஆவணி முப்பதில் நட்ட நடவும்,
அறுநான்கில் பெற்ற புதல்வனும்
பெரியயோர்கள் வைத்த தனம்

645. அறுநான்கில் பெற்ற பிள்ளையும்
ஆவணி ஐம்மூன்றில் நடுகையும் அனுகூலம்

646. ஆவணி முதலில் நட்ட பயிர் அரசர் புகழ்போலும்

647. ஆடி முதல் பத்து, ஆவணி நடுப்பத்து,
புரட்டாசி கடைபத்து அற்பிசி முழுதும் நடலாகாது

648. அற்பிசி மாதத்து நாத்து அருகிலே சாத்து

649. அற்பிசி மாதத்து நடவு அவலுக்கு நெல் காணுது

650. அற்பிசி மாதத்தில் நட்ட நடவும்
அறுபது வயதில் பெற்ற பிள்ளையும்

651. அற்பிசி மாதத்தில் நடவு நட்டால்
ஆனைக்கொப்பு விழும்

652. கார்த்திகை பிறந்ததால் கைநாற்றை எறிந்துவிடு

653. நட்டுக் காய்ந்தால் நாழிநெல் காணுது

654. நட்ட அடியில் காய்ந்தால் நாஞழி நெல்லும் காணுது

655. வேசிக்கு அழுதவனும் வெள்ள உழவில் நட்டவனும்

## இடைவெளி

656. ஐததுநெல், அடர்ந்தது சுற்றம்

657. நண்டு நுழையாத நடவு

658. நெல்லுக்கு நண்டோட
வாழைக்கு வண்டியோட
தென்னைக்குத் தேரோட

659. முதலைக் குறைத்து நெருங்க நடு

660. முடிமுடியாய் நட்டால் கோட்டை
கோட்டையாய் விளையுமா?

661. முடிமுடியாய் நட்டால் பொதி பொதியாய்
விளையுமா?

662. நெருக்கநட்டு நெல்லைப் பார்; கலக்கநட்டு
கதிரைப் பார்

663. அடத்தி அன்னழகு, பொளக்கம் பின்னழகு

664. அள்ளியகாரும் கிள்ளிய பிசானமும்
கொள்ளை போகாது

665. கார்ப்பயிர் கலந்து கெட்டது; பிசானப்பயிர்
நெருங்கிக் கெட்டது

666. அள்ளிய கார்; கிள்ளிய சம்பா

667. அள்ளி நடவெணும் சம்பா;
கிள்ளி நடவேணும்பொற்சாலி

668. அள்ளிய சம்பா, கிள்ளிய நவரை

669. நட்டகுழி நாற்பதுநாள் காக்கும்

670. நாத்து முப்பது, சாத்து முப்பது

671. சேத்திலே முப்பது, நாத்திலே முப்பது
சாத்திலே முப்பது அது நூத்துக்கு முப்பது

*கார்நெல்*

672. காரும் குமரியும் கதிரிலே

673. கடலைத் தூர்த்தாவது கார்விரைக்க வேணும்

674. ஆனிக்கார் சாவியும் குரங்குப் பிணமும் கண்டதில்லை

675. ஆவணிக்காரில் பூசனிப்பூ

676. மின்னிக் கெட்டது கார், முழங்கிக் கெட்டது பிசானம்

677. காக்காய் ஓடுவதும் கார்நெல் காய்வதும்
678. ஆரை நம்பித் தோழா காருக்கேற்றம் போட்டாய்
679. காக்காய் பறக்க கார் வெளுக்கும்
680. வெங்கார் அழிந்ததால் விலை முதலும் காணாது
681. காரும் கம்பும் கண்ணைக்கட்டி அறு

குறுவை

682. தைக் குறுவையோ பொய்க் குறுவையோ
683. தைக் குறுவை தரையை விட்டெழும்பாது
684. தைக்குறுவை தவிட்டுக்கும் உதவாது

சம்பாநெல்

685. எட்டுக்கார் தீஞ்சாலும் ஒரு பிசானம் தீயக்கூடாது
686. கார் காய்ச்சல், பிசானம் விளைச்சல்
687. காய்ந்து கெட்டது பிசானம், காயாமல் கெட்டது கார்
688. மானம் கருத்தால் பிசானம் கருக்கும்
689 ஆண்டு மாறின காரும் அன்றறுத்த சம்பாவும் ஆனவன் கண்ணுக்கு அரிது
690. ஆண்டு மாறின கார் அன்றறுத்த சம்பாவுக்கு ஈடாகாது
691. கார் கடைவிலை, சம்பா தலைவிலை
692. கார்த்திகைக்கார் கடைவிலை, தைச்சம்பா தலைவிலை
693. எல்லா தானியத்தைவிட கருடபட்சி, குண்டுச் சம்பா, சன்னசம்பா கிரேஷ்டம்
694. கொஞ்சித் தழை போட்டு சேடை உழுதால் கெட்டிச்சம்பா நெல் விளையும்
695. கொம்பில் ஒருநெல் விளைந்தாலும் சம்பாவுக்கு இணையாகாது

696. தாளால் ஒருமணி விளைந்தாலும் சம்பாவுக்கு ஈடாகாது
697. வெம்பா பேய்ந்தால் சம்பா விளையும்
698. சோதி பிறவாதோ சம்பா விளையாதோ

## பிற நெல்வகை

699. மண்மாரி பேய்ந்தால் மணல்வாரி விளையும்
700. நட்டாலும் தில்லைநாயகம் நடவேணும்
701. அதிர உதிர அடித்தால் ஒதிர விளையும் பொற்சாவி
702. நவரைக்கு உழுதாயோ நட்டப்பட்டாயோ
703. நவரைக்கு நிலமும், மோருக்கு சாதமும்
704. நவரையோ துவரையோ
705. நவரைக்கு சேறு கூடாது
706. போசனத்திற்கு மோசனம்
707. மழை வறண்டால் மணக்கத்தை விதை

## விளைச்சல்

708. கதிருக்கு முந்நூறு நெல் இருந்தால் முழுவெள்ளாமை
709. கட்டுக்கலம் காணும் கதிர் உழக்கு நெல்காணும்
710. கதிர்நீக்க கட்டுக்கலம்
711. நெல் அளக்கக் குறையும் நிலம் அளக்க வளரும்
712. நெல் இருக்கப் பொன் எள் இருக்க மண்
713. பங்குனி மாதம் பதர்கொள்
714. அஃகம் குறைய ஐந்தும் குறையும்
715. அஃகம் மலிய ஐந்தும் மலியும்
716. நஞ்சை லாபம் புஞ்சையில்
717. ஆயிரம் கலம் நெல்லுக்கு ஓர் அந்து

718. நெல்லுக்குப் பிறகு நேர்ந்ததெல்லாம் பில்லு

## 14. பயிர்வகை

சோளம்

719. சோத்துக்கு ஏமாந்தால் சோளத்தை விதை
720. சோத்துக்கு அலைந்தவன் சோளத்தைப்போடு
காய்க்கு அலைந்தவன் பீர்க்கைப் போடு
721. சோம்பேறி சோளம் விதை
722. மகரப்பட்டச் சோளம் மணமச் செல்வம் கொள்மச்சு
723. பூலா பழுக்க, சோளம் விளைய
724. சோளம் நட்டாப்போல், கம்பு கெட்டாப்போல்

கம்பு

725. கரம்பு உழுது கம்பு விதை
726. கம்புக்குக் கால் உழவு
727. கம்பை மறை, கடலையை விதை
728. கம்பும் காரும் கதிரிலே முடுகும்
729. நெல்லுக்கு நேரே புல்
730. கொட்டாஞல் விரைக்கும் கம்பு கடகத்தில்
வாரிக் கொட்டுகிறது
731. மிருக சீரிடம் மழையில் கம்பு விதைத்தால்
முருங்கைக்காய் போல விளையும்
731. ரோகிணி மழையில் விதைத்தால் ரொட்டிக்குக்
கூட கம்பு விளையாது
732. கார்த்திகை மாதத்தில் கப்பு விதைத்தான்
கூத்தியாள் வாயில் மண்போட்டான்

### ஆரியம்

733. ஆய்ந்தாய்ந்து எடுத்தாலும் ஆரியத்துக்கு இணையாகாது

734. ஆடே படைப்பு, ஆரியமே வெள்ளாமை

735. எட்டாவது தண்ணீர் புட்டுங் கழியும்

### தினை

736. தினை விரைத்த கொல்லையில் பனையும் முளையாது

737. எள்ளுந் தினையும் எழுபது நாள்

738. மஞ்சை நோய்க்குப் புஞ்சைப்பயிர்கள்

### வரகு

739. பூமியில் வரகு கொடுத்தால் கொடுக்கலாம் இல்லாவிட்டால் ராசன் கொடுக்கவேணும்

740. மடவன் வரகு விதை

741. வைகாசி மாசம் வரகு விதைத்தால் கையாடல் கலம் காணும்

742. குருவி ஏறக் கொம்பிருந்தால் குறுணி வரகு குறைவாகும்

743. பனிக்குப் பலிக்கும் வரகு, உளுந்து மழைக்குப் பலிக்கும் நெல்லு

### சாமை

744. சாமை வெள்ளாமை ஊமை வெள்ளாமை

745. சாமைப்பயிர் விளைந்தால் தெரியும், சக்கிலிப்பெண் சமைந்தால் தெரியும்

# 15. பயறுவகை

## கொள்

746. ஐப்பிசிக் காணம் அப்பிப் பிடிக்கும்

747. கார்த்திகை மாதத்தில் கலக்கொள்ளு விதைத்தாலும் விதைக் கொள்ளுகூடக் காணுது

748 கார்த்திகை மாதத்தில் கலக்கொள் விதைத்தால் மரக்கால் கொள் விளையும்

749. கார்த்திகை மாதத்தில் கொள், காடை பதுங்கும்படி இருக்க வேண்டும்

750. கொள்ளுக்கு இரண்டு சால்

751. கொள்ளுக்கு ஒருழவு, எள்ளுக்கு ஈருழவு

752. கோரையைக் கீறி கொள்ளை விதை

753. கல்லைப் பிளந்து காணத்தை விதை

754. எள்ளு விதைக்க எறங்காடு
கொள்ளு விதைக்கக் கல்லாங்காடு

755. இளைத்தவன் எள்ளுவிதைக்க வேண்டும்
கொழுத்தவன் கொள்ளுவிதைக்க வேண்டும்

756, கொள்ளு வெள்ளாமை கொள்ளை வெள்ளாமை

757. கொண்ட பெண்சாதியை விட்டாலும்
கொள் கடலையை விடக்கூடாது

758. கொள்ளில் கொத்தான் முளைத்தால்போல்

759. கொள்ளுச்செடி கொடி ஏருது

760. கொள்ளுக்குப் புல் கொழுகொப்பு கொடுத்ததுபோல்

## கடலை

761. கடலை விதைத்தால் கடுத்த உரம்

762. காரை காய்க்க, கடலை விளையும்

763. களர் உழுது கடலை விதை

764. கடலை விதைப்பது கரிசல் காட்டில்

பயறு

765. பயறுக்குப் பஞ்சபூமி
766. செவ்வல் காட்டில் செழுயாம் பயறு
767. பசித்தவன் பயறை விதை
768. கலப்பயர் விதைத்து உழக்குப்பயர் விளைந்தாலும்
புதுப்பயர் புதுப்பயர்தான்

எள்

769. இளைத்தவன் எள்ளை விதை
770. இளைத்தவன் ஏழு வருசத்திற்கு
எள்ளு விதைக்க வேண்டும்
771. இளைத்தவன் எள்ளு, வலுத்தவன் வாழை
772. இட்டுக் கெட்டவன் எள்ளு விதை
773. இளைக்க எள்ளு விரை, கொழுக்கக் கொள்ளு விரை
774. எள்ளு விதைத்த வயலில் ஏழுநெல் பிடியாது
775. எள்ளு விதைத்த காட்டில் கொள்ளும் விளையாது
776. எள்ளு விதைத்த காடு சப்பைககாடு
கொள்ளு விதைத்த காடு சத்துக்காடு
777. எள்ளுக்கு ஏழுஉழவு உழுதுங் கெட்டேன்
வீச்சுக்கு ஏழு எள்ளு விதைத்துங் கெட்டேன்
வட்டிலைப் பயிற்றிலே மான் மேய்த்துங் கெட்டேன்
கருங்காய் பதத்திலே மழை பேய்ந்துங் கெட்டேன்
விதைத்ததுங் குறுணி கண்டதுங் குறுணி
778. எள்ளுக்கு ஏழு உழவு போடவேணும்
779. எள்ளுக்கு ஏழுழவு, கொள்ளுக்கு ஓருழவு
780. எள்ளு பிடிக்கு ஏழு வீச்சு, பிடிக்கு ஏழு காய்
781. எள்ளும் கொள்ளும் சுள்ளென விதை

782 புரட்டாசி மாதத்தில் பேர் எள் விரை

783 சித்திரை மாதத்தில் கூர் எள் விரை

784. தை எள்ளு தரையில்

785 மாசி எள்ளு மடியில் பணம்

786. வைகாசி எள்ளு வாயிலே

787. எள்ளு விதைக்க எறங்காடு

788. கொள்ளு விதைக்க கொறங்காடு

789. எள்ளும் கொள்ளும் எழுபது நாள்

790. எள்ளுக்கு எண்ணிறந்த நோய்

791. எள் அகஞ் சேரவேணும்,
சாமை களஞ் சேரவேணும்

792. எள்ளும் கொள்ளும் ஏரி எதிர்வாய்ப் பயிரும்
விளைந்துவந்தால் வெள்ளாளன் பாக்கியம்

793. எட்டு எள்ளுக்கு ஒரு சொட்டு எண்ணெய்

794. எட்டுழவு உழுதால் ஒரு சொட்டு எண்ணெய்

795. பத்துவருசம் கெட்டவன் பருத்திவிதை
எட்டு வருசம் கெட்டவன் எள்ளுவிதை

796. எள்ளும் கரும்பும் எடுக்கும் பயிராம்

## ஆமணக்கு

797. கெட்ட குடிக்கு எள்ளும் ஆமணக்கும்
ஏறு கொண்ட வெள்ளாமை

## பருத்தி

798. பருத்திக்குப் பத்து உழவு

799. பருத்திக்குப் பாடு பன்னிரண்டு

800. காரையும் எள்ளையும் கைவிடாதே

801. காரையும் எள்ளையும் கருதிப் பயிரிடு

802. ஆமணக்கும் பருத்தியும் அடர விதைப்பானு?

803. சேரஇருந்தால் செடியும் பகை
தூர இருந்தால் தோட்டியும் உறவு

804. பாயாத கருங் காட்டிற்குப் பருத்தி விதைத்தால்
பலன் தரும்

805. பணம் சேர்ந்தாலும் பருத்தி சேராது

806. பாலும் பருத்தியும் பத்துநாள்

807. இளம்பருத்திகாடு ஏழுழவு செய்தால்
சொப்புப் பணம்வரும்

808. ஆடிப் பருத்தி தேடி விதை

## கரும்பு

809. இளைத்தவன் எள்ளு விதைப்பான்
வலுத்தவன் கரும்பு போடுவான்

810. கதித்தவன் கரும்புவைக்க வேணும்

811. கரும்பு வைப்பது காணி நிலத்தில்

812. களர் நிலத்தில் கரும்பு வை

813. வலுத்தால் கரும்பு இளைத்தால் இரும்பு

814. இருப்பு துளுத்தாலும் கருப்பு துளுக்காது

815. கருப்பு கெட்டால் துரும்புக்கும் கடை

816. மாசி பங்குனியில் கரும்பறு

817. மாசிக் கரும்பும் மகர வாழையும்

818. ஆனி ஆனை வாலொத்த கரும்பும்
ஆடிபூனை வாலொத்த பூசணியும்
அறுநான்கில் பெற்ற புதல்வனும்
புரட்டாசி பதினைந்துக்குள் நட்ட நடுகையும்
பெரியோர்கள் வைத்த தனம்

819 ஆனியில் அரணைவாலொத்த கரும்பும்,
ஆடியில் விதைத்த கம்பும்,
புரட்டாசி பதினைந்தில் நட்ட நடவும்
பெரியோர்கள் வைத்த தனம்

## 16. காய் கறிகள்

*தென்னை*

820. கோடை மழை அடர்ந்த தென்னை
821. ஆடிப் பிள்ளை தேடிப்புதை
822. பெத்தபிள்ளை சோறு போடாவிட்டாலும்
வைத்த பிள்ளை சோறு போடும்
823. வைத்த பிள்ளையைப் பாதுகாத்தால்
பெற்ற பிள்ளைக்கு உதவும்
824. அணில் தாண்டாத் தென்னைமரம்

*வாழை*

825. வாழையிலிருக்கிறது வைப்பு
சோலையிருக்கிறது சொப்பு
826. ஏழைக்கு வாழை
827. ஆடி வாழை தேடி நடு
828. தை வாழை தரையில் போடு
829. எட்டடி வாழையும் பத்தடி பிள்ளையும்
830. எட்டடி வாழை கமுகு, ஈரடி கரும்பு கத்தரி,
இருபதடி பிள்ளை
831. வாழைக்கு வெட்டும் வழுதலங் காய்க்குத்
தண்ணீரும் வேண்டும்
832. ஆறு கொத்து நூறு தண்ணீர் வாழை
833. பத்துக்களை நூறு தண்ணீர் வாழை

834. வைகாசி மழை வாழை பெருகும்
835. வாழைக்கு வடக்கு தென்னைக்குத் தெற்கு
836. வாழை வடக்கு, வான்கமுகு தெற்கு, சோலை கிழக்கு, துய்யப்பிலா மேற்கு
837. வாழை வாழ வடக்கு, வைத்தவன் வாழ கிழக்கு
838. வாழை சாக மேற்கு, வைத்தவன் சாக தெற்கு
839. இலை தின்னி காயறியான்
840. நத்த வாழையிலை நித்தம் காற்பணம்
841. வாழை இளசும் வழுதலை முற்றலும் நடு
842. வாழை வத்தலும் கத்தரி முத்தலும்

### கத்தரி

843. கத்தரிக்குக் கிழமில்லை
844. காயைப் பறித்து கத்தரியை நடு
845. சித்திரைமாதத்தில் சிறந்துழுத புழுதியிலே கத்திரி நடாமல் கரும்பு நட்டு வீணானேன்
846. காருக்கும் கத்திரிக்கும் காலமில்லை
847. கக்கிரி பந்தல் கத்திரி கொத்து

### புகையிலை

848. புகையிலைக்குப் புழுதிக் கொல்லை
849. கள்ளனையும் புகையிலையும் கண்டபோதே கட்டவேணும்

### மஞ்சள்

850. இஞ்சி லாபம் மஞ்சளில்
851. ஏழுகொத்து எழுபது தண்ணீர் மஞ்சள் தன்னிறம் பொன்னிறம்

852. மஞ்சள் வைப்பது மதவை நிலத்தில்

853. எழு வருசம் மஞ்சள் பயிரிட்டால்
என்னிறம் ஆக்கிவிடுகிறேனென்று அது சொல்லும்

*வெற்றிலை*

854. வெற்றிலைக்கொடி விசாகக் கார்த்தியில்
விசிறிப் போட்டாலும் செழிக்கும்

855. வெற்றிலைக்குத் தண்ணீரும் வேசிக்கு மஞ்சளும்

*அவரை*

856. காட்டுக்கோர் அவரை ஊருக்கோர் கவரை

857. ஆடி அவரை தேடிப்போடு

858. ஆடிமாதம் அவரைபோட்டால்
கார்த்திகை மாதம் காய் காய்க்கும்

859. ஆடி ஒருகுழி அவரை போட்டால்
கார்த்திகை ஒரு சட்டிக் கரி

860. ஆனிமாதம் அவரை நட்டால்
கார்த்திகை மாதம் காய்க்கலாகும்

861. அவரை எம்மாதம் போட்டாலும் தை மாதம் காய்

*வெங்காயம்*

862. ஈர வெங்காயத்துக்கு இருபத்தெட்டு புரை

863. வெங்காயம் பந்தாடை விரிச்சாலும் விரிக்கும்
வெந்தாலும் வெந்து போகும்

864. ராமப்பாரு பெல்லாரிக்கு, புல்வரப்பு நெல்லுக்கு

*மிளகாய்*

865. மிளகாய்ச் செடி வளர்ப்போ
பிள்ளைப் பெருவளர்ப்போ

### கீரை

866. கீரைக்குப் புழு வேரில்

### கரணை

867. கரணைக்குக் கலக்கொத்து கொத்தினால் தருணத்தில் பலன் தரும்
868. சேம்புக்குத் தண்ணீர் சோம்பாமல் இறை
869. கற்கடகச் சேனை களவாண்டு தின்பார்கள்
870. ஆனிமாதம் போடுகிற பூசனியும் அய்யஞ்சு வயதில் பிறக்கிற புத்திரனும் ஆபத்துக்குதவும்
871. வெள்ளரிக்காய் விற்றகூடை வெறுங்கூடை; பாகற்காய் விற்ற கூடை பணக்கூடை

### மரங்கள்

872. வெட்டிக் கெட்டது தென்னை வெட்டாமல் கெட்டது பனை
873. தைப்பாளையைத் தடவி எடு
874. ஆடிப்பழத்தைத் தேடிப்பறி
875. பனை நிழலும் நிழலோ? பகைவர் உறவும் உறவோ.
876. மாசி மழை மாதுளை பூக்கும்
877. எந்த இலை உதிர்ந்தாலும் ஈச்ச இலை உதிராது
878. பாறை முறிக்க வேலமரம்
879. வெட்டிக் கெட்டது வேம்பு வெட்டாமல் கெட்டது பூவரசு
880. பூஅரசு இருக்கப் பொன்னுக்கு அழுவானேன்
881. அகத்தி ஆயிரங்காய் காய்த்தாலும் புறத்தி புறத்தியே

# 17. கால்நடைகள்

*எருதுகள்*

882. காடுவளம் குண்டைவளம்; குண்டைவளம் குடிவளம்
குடிவளம் கோயில்வளம்; கோயில்வளம் கோன்வளம்
883. குண்டை இளைத்தால் குடி இளைக்கும்
884. எருது இளைத்தால் எல்லாம் இளைக்கும்
885. குண்டை விளங்கினுல் குடிவிளங்கும்
886. குண்டைபெருத்தால் குடி பெருகும்
887. குண்டைபலமோ குடிபலமோ
888. குண்டை சாவு கொடுத்தவனும்
பெண்டு சாவு கொடுத்தவனும் ஒன்று
889. ஆடுமாடு இல்லாதவன் அடைமழைக்கு ராஜா
பெண்டுபிள்ளை இல்லாதவன் தண்டுக்கு ராஜா
890. அருங்காட்டை விட்டவனும் கெட்டான்
ஆனமாட்டை விற்றவனும் கெட்டான்
891. ஆனமாட்டை விற்றவனும் அருங்காட்டைத்
தொட்டவனும் கெட்டான்
892. மாடு முக்கிவர வீடு நக்கிவரும்
893. மாட்டுக்கு மேய்ப்பும் குதிரைக்குத் தேய்ப்பும்
894. மேய்த்துத் தெளியாதமாடு தேய்த்துத் தெளியும்
895. அற்பிசி அறக்காய்ந்தால் ஆடு ஒருமாடு,
மாடு ஒரு மலை
896. மாசிக் கிடாவும் மார்கழி நம்பியானும்
897. ஏரி மிதந்தால் இடையனை மதியாது

*பல்வகை எருதுகள்*

898. ஈடன் பாடுஅஞ்சான், கூழை எருது நுழம்புஅஞ்சாது

899. ஆலம்பாடி அழகெருதுஉழவுக்குஉதவாதஇழவெருது

900. வல்விலைக் கூறையும் மெல்விலைக் காளையும் ஆகாது

901. முழுமயிலை, முக்கால்பில்லை,
அரைவெள்ளை, கால்கறுப்பு

902. கறுப்புமாடு கபடமாடு

903. கறுப்புமாடு கால்மாடு

904. காரி கால்மாடு, கபடு விட்டால் ஒன்னேகால்மாடு

905. பசு ஏறுவாலும் எருது கூழைவாலும் ஆகாது

906. வால்நீளம் வயசுநீளம்

907. மாடுவாங்க அறியாதவன் மடக்கொம்பு மாடு வாங்கு

908. மாடறியாதவன் மட்டையைக்கொள்ளு

909. மாட்டை நடையில் பார், ஆட்டைக் கெடையில் பார்

910. உழுகிறவன் இளப்பமானால் எருது மைத்துனன்
முறை கொண்டாடும்

911. அடியாதமாடு படியாது

912. உழுதமாட்டை முகத்திலடிக்கலாமா?

913. உழவுக்குப் பிணைத்துவிடுகிறமாடும்
கூட்டுக்குப்பிடித்து விடுகிற ஆளும் உதவாது

914. உழவு மறந்தால் எருதுபடுக்கும்

915. படுத்த மாட்டைப் பல்லால் வாலைக்கடி

916. கள்ளமாடு சந்தையேருது

917. உழவொழிந்த மாடு பட்டிப் புறத்திலே

918. சண்டி கலைந்தால் காடுகொள்ளாது

919. எடுத்தெடுத்து உழுதாலும் எருதாகுமா கிடா

920. நடவு நட்டாலும் நாற்று மீந்தாலும்
நான் நடக்கிறநடை இதுதான் என்று
சொல்லுமாம் கிடா

921. உழவுக்கு ஒரு சுற்றும் வராது
ஊணுக்குப் பம்பரம்

922. உழுகிற குண்டையானால் உள்ளூரில் விலையாகாதா?

923. எருத்துப் புண்ணுக்குச் சாம்பல் மருந்து

924. வெக்கைக்கு வேலி மறைப்பு

பசு

925. கறக்கிற பசுவையும் கைக்குழந்தையையும்
கண்ணாகப் பார்க்க வேணும்

926. கறவைமாடு கண்ணுக்குச் சமானம்

927. மேய்ப்புப்பாதி; தேய்ப்புப்பாதி

928. ஆவும் தேவும் ஐந்து வருசத்தில் பலன் ஈயும்

929. பாலைப்பார்த்து பசுவைக்கொள்ளு
தாயைப்பார்த்து மகளைக் கொள்ளு

930. பாழாய் போகிறது பசுவின்வாயில்

931. வைக்கல் தின்கிற மாட்டுக்குப் பால் கொஞ்சம்
மதுரம் அதிகம்

932. பாடிக் கறக்கிறமாட்டை பாடிக்கறக்க வேண்டும்
ஆடிக்கறக்கிறமாட்டை ஆடிக்கறக்க வேண்டும்

933. கட்டிக் கறக்கிற மாட்டைக் கட்டிக் கறக்க வேண்டும்
கொட்டிக் கறக்கிற மாட்டைக் கொட்டிக்
கறக்க வேண்டும்

934. முந்நாழி கறக்கிற பசுவானாலும்
முன் இறப்பைப் பிடுங்கிற பசு ஆகாது

935. குடப்பால் கறந்தாலும் கூரையைப்பிடுங்குகிற
மாடாகாது

936. நல்லாவின் கன்றாயின் நாகும் விலைபெறும்

937. இளங்கன்று பயமறியாது

938. வைக்கோல் படப்புக்கு ஒரு கன்றுகுட்டி
வாழ்கிற வீட்டுக்கு ஒரு பொட்டைக்குட்டி

939. முட்டி ஊட்டின கன்று முதார்க்கன்று

எருமை

940. வடவியை வெட்டி ஆள், எருமையைக் கட்டி ஆள்
941. எருமைக்கன்று அருமைக்கன்று
942. அருமையற்ற வீட்டில் எருமையும் குடியிராது

ஆடு

943. ஆடு கொழுத்தால் இடையனுக்கு லாபம்
944. மாடு மேயாத மட்டபுறச் கட்டையை
ஆடுமேய்ந்து அதி திருப்தி யாகும்
945. யானைவயிறு நிறைந்தாலும் ஆட்டுவயிறு நிறையாது
946. காடுகெட ஆட்டைவிடு
947. காடுகெட வெள்ளாட்டை விடு
948. கண்டதெல்லாம் ஓடித்தின்னும் ஆடு
நின்று நின்று மேய்ந்து போகும் மாடு
949. சித்திரை மாதம் சிறந்துமழை பெய்யாமற் போனால்
வில்லாததை விற்று வெள்ளாடு கொள்ளு
950. கோடைமழை பெய்யாதா குரும்புஆடு சாகாதா
துட்டுக்கு எட்டாடு தூக்கிக் கொடுக்கானு
951. இனம் இனத்தோடு; வெள்ளாடு தன்னோடு

## 18. ஒட்டுப் பழமொழிகள்

952. வெளாவுக்கு வெளா பாத்திதானே
953. கூட்டுக்குக் குட்டைக் கலப்பை
954. அறுக்கத் தெரியாதவன் இடுப்பில்
ஆயிரம் அரிவாள்
955. அடித்த ஏருக்கும் குடித்த கூழுக்கும் சரி
956. அழிந்த கொல்லையில் குதிரை மேய்ந்தால் என்ன?
கழுதை மேய்ந்தால் என்ன?

957. வேலியே பயிரை மேய்ந்தால் விளைவதெப்படி?

958 அடைமழை விட்டாலும் செடிமழை விடவில்லை

959 அவரை விதைக்கத் துவரை முளைக்குமா?

960. கரும்பு கட்டோடு இருந்தால்
எறும்பு பொட்டாட்ட இருக்கும்

961. கரும்பு கட்டோடு இருந்தாலும்
எறும்பு தானே வரும்

962. கரும்பு ருசி என்று வேரோடு பிடுங்கலாமா?

963. காற்றுள்ள போதே தூற்றிக் கொள்

964. அளக்கிற நாழி அகவிலை அறியுமா?

965. நல்லமாட்டுக்கு ஒரு சூடு

966. அக்கரை மாட்டுக்கு இக்கரை பச்சை

967. பிணையல் அடிக்கிற மாட்டை
வாயைக் கட்ட முடியுமா?

968. போரோடு தின்கிற மாட்டுக்குப்
புடுங்கிப் போட்டுக் கட்டுமா?

969. எடுத்துவிட்ட மாடு எத்தனை தூரம் ஓடும்?

970. எருத்து நோய் காக்கை அறியுமா?

971. கெண்டையைப் போட்டு வராலை இழுக்கிறது

## 19. புதுமொழிகள்

### உழுதொழில்

972. வேளாண் தொழிலை விரும்பிச்செய்

973. பூமி உழுதோர் பூரித்து வாழ்வார்

### உழவர்கள்

974. உழுபவன் வேர்வை உலகைக் காக்கும்

975. நன்செய் உழுதோன் நன்கொடையாளன்

676. கடனிலா உழவன் திடனுடன் இருப்பான்
977. கணக்கிலாச் செலவினுல் உணக்குறும் உழவன்

நிலம்

978. களரை முறிக்க ஜிப்சம் உப்பு
979. உள்ள நிலத்தில் உற்பத்தி அதிகம் செய்

உரம்

980. பூமிக்கு உரமிடின் சேமித்து உணவிடும்
981. குப்பையில் கோடி தனம்
982. நிலத்தை அறிந்து உரத்தை இடு
983. வராட்டி தட்டி வீணுக்காதே
984. எலும்பும் மீனும் ஏற்ற உரமாம்
985. அவிரியும் பருத்தியும் ஆழத்தேடும்
986. கேப்பைப் பயிரோ கிரகிக்கும் மேலுரம்

விதை

987. பொறுக்கு விதையே பெருக்கும் விளைவை
988. விதையுடன் மருந்து மெத்தச் சிறந்தது

பயிர்

989. கூட்டுப் பயிரால் கோடி நன்மை
990. பருத்திப் புகையிலை பயிரிடுவதிலும்
தானிய வகைகள் தழைப்பது நன்ரும்

களை

991. உள்ள களையை விட்டவன் உலகத்திற்கே கெட்டவன்

## காப்பு

992. வேலி இல்லெனில் காலியாகும்
993. வேர்கள் தானே வாய்கள் செடிக்கு
994. பூக்கள்தானே பிறப்புக்கு உரியன
995. காற்றும் தேனீயும் கருவைக் கூட்டும்

## விற்பனை

996. பொறுத்து விற்பது பொருளைக் கூட்டும்
997. இடையினர் லாபம் அடைவதைத் தடு

## கூட்டுறவு

998. கூட்டுறவு முறையே வாட்டம் போக்கும்
999. கூட்டுறவே நாட்டுயர்வு

## ஏற்றுமதி

1000. எண்ணெ வித்தின் ஏற்றுமதியால்
மண்ணிற்கு உரமும் மாட்டிற்கு உணவும் ஆம்

## காடுகள்

1001. காடுகள் இருப்பின் நாடுகள் செழிக்கும்
1002. மலைவளம் தானே நிலைவளம் என்பர்

## கடலோரம்

1003. சமுத்திர ஓரம் சவுக்கு வளரும்
1004. மணல் வெளிதன்னில் சணலும் சவுக்கும்

## பட்டுப்புழு

1005. கூடு வளர்ப்பதும் குழந்தை வளர்ப்பதும் ஒன்று

# 20. உலக நாடுகளில் வேளாண் பழமொழிகள்

*உழவின் சிறப்பு*

1006. உங்கள் சந்ததியினர்க்குச் சரியான இரண்டு
மார்க்கங்களைப் பற்றிச் சொல்லிக்கொடுங்கள்
அவை இலக்கியமும் விவசாயமும்

(சீனு)

1007. கலப்பையும் மண்வெட்டியும்
உலகுக்கு உணவளிக்கின்றன

(செக்)

1008. இரண்டு தொட்டில்களை ஆட்டுவதைவிட
ஒரு கலப்பையால் உழுவதுமேல்

(இங்கிலாந்து)

1009. நாம் வயலை உழுதால்
கடவுள் தானியத்தை அளிப்பார்

(செக்)

1010. விவசாயம் எளிதானதன்று

(இலத்தீன்)

*உழவர்கள்*

1011. குடியானவனுடையகுழந்தைகள் அவன் செல்வங்கள்,
கனவானுடைய குழந்தைகள் அவன் கடன்கள்,
பிரபுவின் குழந்தைகள் திருடர்கள்.

(போலந்து)

1012. உன் தோட்டத்தில் செடியை நட்டால்
அது பலன் கொடுக்கும்,
ஒரு மனிதனை அங்கே நட்டால்
அவன் உன்னை விரட்டி விடுவான்

(அரேபியா)

1013. வயலில் முதல் ஆளாகவும்
படுக்கைக்குக் கடைசி ஆளாகவும் இரு
(சீனு)

1014. தானியத்தை விதைப்பவன்
புண்ணியத்தை விதைக்கிருன்
(பாரசீகம்)

1015. விவசாயியின் வரவேற்புக்கூடம்
தொழுவின் முற்றம்
(வேல்ஸ்)

1016. நாள்தோறும் நிலத்தைச் சுற்றிப் பார்ப்பவனுக்கு
ஒவ்வொரு தடவையும் ஒரு நாணயம் கிடைக்கும்
(யூதர்)

1017. வயலுக்கு மிக உயர்ந்த உரம், அடிக்கடிச்
சொந்தக்காரன் பார்வை இடுதல்
(செர்மனி)

1018. உடையவன் கால்தடங்களே
வயலுக்குச் செழிப்பளிக்கும்
(செக்)

1019. உடையவன் கண்பார்வையில் பயிர் வளரும்
(கங்கேரி)

1020. உடையவன் இல்லாத வயல் தாயில்லாக் குழந்தை
(எஸ்டேனியா)

1021. உடையவன் இல்லாத நிலம் அனுதைக் குழந்தை
(ரஷ்யா)

1022. எருதுகளை மற்றவர்களுக்குக் கொடுத்தவன்
தன் விரலாலேயே உழவேண்டும்
(பின்லாந்து)

1023. உழவன் நிலத்தை ஒருமுறை ஏமாற்றினுல்
அது அவனை ஒன்பது முறை ஏமாற்றும்
(எஸ்டேனியா)

1024. மரம் நட்டவன் அதன் கனியைப் புசித்தல் அரிது

(ஹாலந்து)

1025. விதைத்தவனுக்கு அறுக்க உரிமையுண்டு

(செர்மனி)

1026. உழுபவனுக்கு ஆண்டவன் துணை உண்டு

(ரஷ்யா)

*நிலம்*

1027. அவசியமான பொருள்கள் நிறைந்த வீடு.
நன்றாக உழுத ஒருசிறு நிலம்,
நல்ல சிந்தனை உடைய சிறு மனைவி
மூன்றுமே இன்ப வாழ்வளிக்கும்

(இங்கிலாந்து)

1028. நிலம் மழை இல்லாமல் அழும்
விதவை கணவன் இல்லாமல் அழுவாள்

(இந்தியா)

1029. செழிப்புள்ள நிலமும் ஓய்வில்லாவிட்டால்
ஆளாகி விடும்

(ஸ்பெயின்)

1030. அரை ஏக்கரில் அதிகம் விளையும்

(ஸ்காட்லாந்து)

1031. கூட்டாக உள்ள வயலைக் கரடிகள் அழிக்கும்

(அமெரிக்கா)

1032. நன்றியும் கோதுமையும் நல்ல நிலத்தில்தான்
விளையும்

(செர்மனி)

*உரம்*

1033. வயலுக்கு செய்வு கொடுத்தால்
அதிக விளைச்சல் காணும்

(சீனு)

1034. உரமே குடியானவனின் தங்கம்
(எஸ்டேனியா)

1035. இறைக்கிற கிணறுகளில் நீர் வற்ருது
(இங்கிலாந்து)

1036. கிணற்றுக்கு அழகு தண்ணீர்
பெண்ணுக்கு அழகு திலகம்
(இந்தியா)

1037. இனிய நீருள்ள கிணறு காலியாகவே இருக்கும்
(எகிப்து)

1038. விதையைப் பூச்சி அரிக்கிறது, நகர மக்களேயே
லேவாதேவிக்காரன் அழித்து விடுகிருன்
(டென்மார்க்)

*வேலி*

1039. வேலியில்லாத தோட்டம்
வேலியுள்ள பாலேவனம்
(பல்கேரியா)

1040. வேலி தணிந்திருந்தால் எவனும்
தாண்டி வருவான்
(எஸ்டேனியா)

*பயிர்*

1041. வேரைவிட எந்தக் கிளேயும் முக்கியமில்லே
(சப்பான்)

1042. தானியத்தில் பழையது, வெண்ணேயில் புதியது
(இந்தியா)

1043. புருவுக்கு அஞ்சுவோன் தினே விதைக்க மாட்டான்
(ரஷ்யா)

1044. பறவைகளுக்குப் பயந்து விதைக்காமல்
இருக்க வேண்டாம்
(சப்பான்)

1045. கதிர் முற்றிவிட்டால் அறுவடையை
நாளைக்கு என்று ஒத்திப் போடக்கூடாது
(லத்தீன்)

## கால்நடை

1046. பால்கறக்கும் முன் பசுவைத் தட்டிக்கொடு
(ஆப்பிரிக்கா)

1047. பாலும் முட்டையும் வேண்டுமென்றால்
பசுவையும் கோழியையும் துன்புறுத்தக்கூடாது
(திபெத்)

1048. மாடு தொலைத்தவனுக்கு
மணியோசை கேட்டுக்கொண்டே இருக்கும்
(ஸ்பெயின்)

1049. வெள்ளாடுதான் தின்பதற்குமேலாக லாபமளிக்கிறது
(அல்போனியா)

1050. கம்பளத்திற்காக ஆட்டைக் கொய்யாதே
(ரஷ்யா)

1051. ஆடு அன்பாய் இருந்தால் கண்ட குட்டிகள் எல்லாம்
அதில் பால் குடிக்கும்
(இத்தாலி)

1052. பொதுவில் உள்ளமாடு புழுத்து செத்தது
(இந்தியா)

1053. கோழிக்கு ஊசிப்புண் போதும்
(இந்தியா)

1054. உனக்குத் தொந்தரவு இல்லையா அப்படியானால்
ஒரு வெள்ளாட்டை வாங்கிக்கட்டு
(இந்தியா)

1055. வைக்கோல் இருக்கிறதா என்று பசுவுக்கு
என்ன கவலை
(செர்பியா)

1056. பசுவும் கன்றும் இல்லாதவன் நன்றாகத் தூங்குவான்
(இந்தியா)

## விடுபட்டவை

*உழவுத்தொழில்*

1057. கணக்குப்பார்த்து விவசாயம் செஞ்சா
கட்டிவராது வெள்ளாமை

1058. ஞானமும் கல்வியும் நாழி அரிசியிலே

1059. பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்

1060. பட்டும் பாழ்; நட்டும் சாவி

1061. தாம்பைப் பிடிச்சு உழுதவனுக்குத்
தார்க்குச்சிதான் மிச்சம்

*உழவர்கள்*

1062. உழவர்க்கு அழகு உழுதூண் விரும்பல்

1063. அஃகமும் காசும் சிக்கெனத் தேடு

1064. விளைவதானாலும் அளவறிந்து அழி

1065. விடலைகள் இட்ட வெள்ளாமை
விளைந்தாலும் வீடுவந்து சேராது

1066. காணி ஆசை கோடிக் கேடு

1067. வரப்பு வெட்டினவன் வயல் விளைச்சல் இல்லை

1068. காடு விளையாவிட்டாலும் கடமை போகுமா?

1069. எல்லை பாழ்பட்டாலும் கொல்லைக்கடமை விடார்

1070. கல்லோடு முரணினாலும் கணக்கனோடு முரணாதே

1071. கணக்கனைப் பகைத்தான் காணி இழந்தான்

1072. அதிகாரி வீட்டுக் கோழி முட்டை
குடியானவன் வீட்டு அம்மியை உடைத்ததாம்

*நிலம்*

1073. கைத்த நிலமாயினும் கையேல் வை

1074. மண்ணாயினும் மனையாயினும்
காப்பாற்றினவர்க்கு உண்டு
1075. நெருப்பு இருக்கிற காட்டை நம்பினாலும்
நீர் இருக்கிற காட்டை நம்பக் கூடாது

### நீர்வளம்

1076. மாரியல்லது காரியமில்லை
1077. நீரகம் பொருந்திய ஊரகத்திற்கு

### உழவு

1078. காளையைக் கட்டி கார் உழவை ஓட்டு
1079. காடு அறியாதவன் கல்லங்காட்டை உழு
1080. குத்திக் கொழுப் பிடுச்சா
கும்பி நிறையும் ஆசாரிக்கு

### எரு

1081. எருப்போட்ட பயிர்தான் எகிறி வளரும்
1082. ஆடு கிடந்த இடத்தில் நெல்லை விதை
1083. முன்போகத்துக்கு ஆட்டெருவும்
பின்போகத்துக்கு தழை எருவும்
1084. சாணி ஒரு கூடை, சவ்வாது ஒருபண எடை
1085. காய்ந்த எரு காசுக்கும் உதவாது

### பருவம்

1086. ஆடிப் பட்டம் தேடி விதைச்சா
கூடி வரும் வெள்ளாமை
1087. தை பிறந்தால் வழி பிறக்கும்
1088. காருக்குப் பின் பட்டமில்லை
கார்த்திகைக்குப் பின் மழையுமில்லை

1089. காலத்தில் பயிர் செய்தால்
கடன் வாங்க வேண்டாம்

நடவு

1090. நடவுக்குத் தெளி, நாலத்தொன்று

அறுவடை

1091. ஆனை கட்டத் தாள், வானம் முட்டப் போர்

பருத்தி

1092. பாயாத கருங்காட்டிற்குப் பருத்தி விதைத்தால்
பலன் தரும்

தேங்காய்

1093. பழந் தேங்காயில்தான் எண்ணெய்

வாழை

1094. வாழ்கிற வீட்டுக்கு வாழை வைத்துப்பார்

பீர்க்கு

1095. பெண்வளர்த்தி பீர்க்கங் கொடி

கீரை

1096. பொன்னை எறிந்தாலும் பொடிக் கீரையை
எறியலாமா?

நெல்லி

1097. நீரைத் தெளிக்க நெல்லி

மா பலா

1098. பலா உத்தமம்
மா மத்திமம்
பாதிரி அதமம்

# கால்நடைகள்

*எருது*

1099. உள்ளூர் மருமகனும் உழுகிற கடாவும் சரி

1100. எருதுக்குத் தன்புண் அழற்சி
காக்கைக்குத் தன்பசி அழற்சி

*பசு*

1101. கறவை உள்ளவன் விருந்துக்கு அஞ்சான்

1102. வீட்டுக்குச் செல்வம் மாடு
தோட்டத்துக்குச் செல்வம் முருங்கை

1103. புதுமாடு புல்லு பெறும்

1104. கள்ளமாடு துள்ளும்

*எருமை*

1105. வீட்டுக்கு வாய்த்தது எருமை
மாட்டுக்கு வாய்த்தது போர்

*ஆடு*

1106. முன்னே ஆட்டைப்பிடி, பின்னே மாட்டைப்பிடி

1107. வெள்ளாடு போனவழி வெட்டவெளி

1108. ஆட்டுக்கு ஆறுமாதம் அம்மாவுக்கு எட்டுமாதம்

*கோழி*

1109. நிதம் கண்ட கோழி நிறம் கெடும்

*மீனியல்*

1110. சூலாகும் மீன்கள் ஒன்றை ஒன்று
மோந்துகொள்ளும்

### ஒட்டுமொழிகள்

1111. ஏழையைக்கண்டால் மோழையும் பாயும்

1112. செத்த ஆடு கால்பணம்
சுமைக்கூலி முக்கால் பணம்

1113. துள்ளுகிற மாடு பொதி சுமக்கும்

1114. தூண்டில்காரனுக்கு மிதப்பிலே கண்

1115. நீர் உள்ள மட்டும் மீன்குஞ்சு துள்ளும்

1116. சிறுமீன் எல்லாம் பெருமீனுக்கு இரை

### நாட்டுமொழிகள்

1117. கொங்கு விளைந்தால் எங்கும் விளையும்

1118. கொங்கு மலிந்தால் எங்கும் மலியும்

1119. கொங்கிலே குறுணி விற்கிறது, இங்கென்னத்திற்கு?

1120. மதுரையிலே பூசணிககாய் மாட்டுவிலை

## மனையியல்

### உணவு

1121. உண்ட உடம்பிற்கு உறுதி, உழுத புலத்தில் நெல்லு

1122. மாதா ஊட்டாத அன்னம் மாங்காய் ஊட்டும்

1123. கடைசிச் சோறுக்கு மோரும் கால் மாட்டிற்குப்
பாயும் வேண்டும்

1124. பொன்னுங் கண்ணிக்கு உப்பிட்டு ஆக்கினால்
உண்ணாத பெண்ணும் ஒரு உழக்கு உண்ணும்

1125. உப்பிட்டுக் கெட்டது மாங்காய்
உப்பிடாமல் கெட்டது தேங்காய்

1126. கறந்த பாலைக் காய்ச்சாமல் குடித்தால்
காச வியாதி தானே எடுபடும்

1127. ஆனை மதத்தால் வாழைத்தண்டு
ஆண்பிள்ளை மதத்தால் கீரைத்தண்டு

உடை

1128. ஆள்பாதி ஆடைபாதி
ஆடையில்லாத மனிதன் அரைமனிதன்

உறையுள்

1129. இடம்பட வீடு எடேல்
1130. சிறுகக்கட்டி பெருகவாழ்
1131. கட்டின வீட்டுக்கு எட்டு வக்கணை

குழந்தை வளர்ப்பு

1132. குழந்தை வளர்ப்பது ஒரு கோயில் கட்டுவதற்குச் சமம்
1133. தாயைப்போல பிள்ளை, நூலைப்போல சேலை

## வேளாண்மை உவமைகள்

1. காய்ந்த மாடு கம்பில் புகுந்ததுபோல
2. நல்ல மரத்தில் நரையான் விழுந்ததுபோல
3. நல்ல மரத்தில் புல்லுருவி முளைத்ததுபோல
4. அரைத்த பயிர் முளைத்ததுபோல
5. அறுத்த கோழி துடிப்பது போல
6. ஆடிக்காற்றில் இலவம்பஞ்சு பறந்ததுபோல
7. ஆடு தழை தின்பதுபோல
8. ஆனை உண்ட விளாங்கனிபோல
9. இருக்கிற அன்றைக்கு எருமைமாடு தின்றாற்போல
10. உழுகிற மாட்டை நுகத்தில் அடித்ததுபோல
11. எலுமிச்சம் செடிக்கு எருப்போட்டாற்போல

* * *

# சொற்பொருள் விளக்கம்

## உழவுத் தொழில்

3. சீர்-பெருமை, கொன்றை வேந்தன் - 29

9. தலைக்கடைக்கீழ்-வாயிற்படியில்
வேதநூல் முதலாகி விளங்குகின்ற கலையனைத்தும்
ஓதுவார் எல்லாம் உழுவார் தம் தலைக்கடைக்கே
கோதைவேல் மன்னவர் தம் குடைவளமும்
கொழுவளமே
ஆதலால் அவர் பெருமை யார் உரைக்க வல்லாரே?
(ஏர் எழுபது - 11)

10. கொழுமீதில் - உழுதொழிலால் வரும் நன்மை

11. கொன்றை வேந்தன் - 46

12. ஆத்திசூடி - 81

13. இரசவாதம்-இரும்பைப் பொன் ஆக்கும் வித்தை. அதுபோல் உழுதொழிலால் மண்ணில் பொன் விளையச் செய்வது

15. குடிஏற-உழவர் வளம்பெற, நெல்ஏற-விளைச்சல் பெறுகும், (விளைச்சல் பெறுக, உழவர் வளம் பெறுவர். நெல்ஏற குடிஏற என்றும் வழக்கில் உள்ளது)

16. குடித்தனம் - உழுதொழில் செய்வது

19. ஏரடிக்கும் சிறுகோல் - உழவு மாடுகளை ஓட்டப் பயன்படும் தார்க்குச்சி

20. முடியானவனே என்ற கேள்விக்குறி முடிஆனவன் தான் என்ற பொருளைத் தருவது. முடிஆனவன் - நாட்டை ஆள்பவன்

23. செட்டு - வாணிகம், நேரம் முதற்கொண்டு எல்லா வற்றிலும் கணக்குப் பார்த்துச் செய்யும் தொழில் வாணிகம் உழவுத் தொழிலில் நேரத்தைக் கணக்குப் பார்த்தால் எதுவும் நடைபெறுது.

27. அழிவே அழியினும்-நட்டம் வரினும், உழவுத்தொழிலை ஒரு தொண்டாகக் கருதிச் செய்தல் வேண்டும் என்பது கருத்து

29. வல்லாண்மையாலே-உழவுத் தொழிலுக்கு உழைக்கும் மனமும் உழைக்கும் திறனும் மிகவும் தேவை

31. கோழைபடாது-தோல்வியை உண்டாக்காது (கொன்றை வேந்தன் - 77)

உழவர்கள்

33. கச்சேரி - அரசு அலுவலகம் (மாவட்ட, வட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம்)

34. கரம்பை - தரிசு

36. நல்ல நிலம் இல்லையே என்று கவலைப்படாமல், உள்ள நிலத்தில் ஏற்றதைப் பயிரிட்டு, ஏனைய தொழில்செய்து பிழைக்கலாம்

38. எய்த்து - சோம்பி, ஏழை - அறிவில்லாதவன்
(கொன்றை-13)

42. நகரத்தில் குடி இருந்து கொண்டு கிராமத்தில் பண்ணையம் பார்ப்பது பலன் அளிக்காது.

44. பரப்பன் - அவசரக்காரன், இரப்பன் - பிச்சை எடுப்பவன்

48. தாத்துக்கோல் - உழவு மாடுகளை ஓட்டும் தார்க்குச்சி

49. படைமரம் - கலப்பை
கோவணம் - இடுப்புத் துணி

58. பத்துக்குப்பின் பயிரு - உழவு செய்தல், எருப்போடுதல், விதைத்தல், நீர்ப்பாய்ச்சுதல், களை எடுத்தல், காத்தல், அறுவடை செய்தல், அடித்துத் தூற்றல், காயவைத்தல், பக்குவப்படுத்தல் இவ்வளவும்

செய்தால்தான் பலன் கிட்டும் என்னும் பொருளில் பத்து என்ற எண் பயன்படுத்தப் பட்டுள்ளது.

60. வரப்பைத் தலையணையாகவும் வைக்கோல் புற்களைப் பஞ்சுமெத்தையாகவும் கருதிப் பாடுபட்டால்தான் உழவுத்தொழிலில் உரிய பலன் பெறமுடியும்.

63. வாரம் - உழவுசெய்து வருவதில் பாதி வாரம் என்பது. கொண்டு வாரம் கொடுத்தல் - உழவு செய்ததில் வருவாய் இல்லாமையால் கடன் வாங்கி நிலச் சொந்தக்காரர்க்குக் கொடுக்கும் நிலை

65. வருவதில் பாதி என்பதால் வரவே குறைவு என்று சொல்லவும் வாய்ப்பு உண்டு, உழுபவன் ஏமாற்றுவதற்கு இம்முறை வழிவகுக்கும்

66. கற்றறிந்தவர்கள் எந்த ஊரிலும் வாழலாம். அதே போல் நன்ருக உழுதொழில் தெரிந்தவர்கள் எந்த ஊரிலும் உழுது பிழைக்கலாம். உழுபவர்க்கு நிலமில்லாத நிலை இருந்ததை இப்பழமொழி வெளிப்படுத்துகிறது.

67. நடும்பொழுது விளையாட்டாக, மகிழ்ச்சியாக இருக்கலாம். அறுவடை செய்யும் பொழுது கவனத்தோடு செய்ய வேண்டும், இல்லெனின் விளை பொருள்கள் வீணுகிவிடும்

69. பண்ணுடி-பண்ணையார், எய்தனே-கூலியில்ஏமாற்றினுல்

70. ஆண்டை - பண்ணையார், சாம்பான் - உழவுத்தொழில் செய்பவன், பறிதைப்பவன்

71. பிரவேசித்த - நுழைந்த, அரூபம் - அமைப்புக்கெடும்

73. கொல்லை - தோட்டம், புள்ளிக்காரன்-கணக்குப்பிள்ளை. கணக்குப் பிள்ளை இவ்வளவு விளையும் என்று எழுதிய படியே வரி செலுத்த வேண்டும்

75. பூவைசியர் சிரேஷ்டம் - வேளாளர்கள் (உழுதொழில் செய்பவர்கள்) முதன்மையானவர்கள்

79. பழங்கலம் ஏறுவதில்லை - சரியாக விளைவை எடுக்க முடியாது. சிற்றூரில் ஊழியம் செய்பவர்கள் உரிய காலத்தில் விதைத்தாலும் விளைச்சலுக்கு வரும் வரை அதையே கவனித்துக் கொண்டிருக்க முடியாதபடி ஆளுக்கு ஒரு வேலை வைப்பார்கள்

*நிலவளம்*

84. கச்ச-வளம் குறைந்த, கைசேர்க்கை-ஒன்ருகச் சேர்ந்து இருப்பதே நலம்

85. புறணி - முல்லைநிலம், பொருள் சேகரம் - ஓரிடத்தில் சேர இருத்தல் நலம்

86. பலம்சேர - ஒன்று சேர்ந்து இருத்தல்

88. உத்தரம் - ஒரு நட்சத்திரம், செப்டம்பர் 12 முதல் 25 வரை, தமிழ் - ஆவணி இறுதி

89. துரவு - கிணறு, பெருங்கிணறு, நீர்நிலை

90. உம்மல் - பொருமை

94. ஒரு செய் - நிலம், சுமார் 2½ ஏக்கர், அஸ்தம் - ஒரு நட்சத்திரம், செப்டம்பர் 26 முதல் அக்டோபர் 8 வரை தமிழ் புரட்டாசி

101. ராஜவரும்படி - அரசாங்க ஊதியம் நிலையானது, அது போல் நஞ்சையில் பயிரிட்டது உறுதியாக விளையும்

110. ஆரை - ஒருவகைக்கீரை, களைச்செடி

111. கரந்தை - ஒருவகைச் செடி

112. செவ்வல் - செம்மண் நிலம்

122. உவட்டை - களர்நிலம்

123. பலம் - ஒரு நிறுத்தல் அளவை
(3 தோலா - 1 பலம், 8 பலம் - 1 சேர், 5 சேர் - வீசை, 1 வீசை

வேலிகள்

129. கன்னும் - கன்று, தென்னங்கன்று முதலியவை. ஆலை - செக்கு, வாணியன் - எண்ணெய் வணிகன்

123. ஒரண்டைக்காடு - ஒருபுறம் மட்டும் வேலியடைத்த தோட்டம்

## நாளும் கோளும்

| நட்சத்திரம் | தமிழ் ஆங்கில மாதம் |
|---|---|
| 1. அசுவணி | பங்குனி 28 - சித்திரை 12<br>ஏப்ரல் 11 - ஏப்ரல் 25 |
| 2. பரணி | சித்திரை 13 - சித்திரை 26<br>ஏப்ரல் 26 - மே 9 |
| 3. கிருத்திகை | சித்திரை 27 - வைகாசி 9<br>மே 10 - மே 23 |
| 4. உரோகிணி | வைகாசி 10 - வைகாசி 23<br>மே 24 - சூன் 6 |
| 5. மிருகசீரிடம் | வைகாசி 24 - ஆனி 8<br>சூன் 7 - சூன் 22 |
| 6 திருவாதிரை | ஆனி 9 - ஆனி 20<br>சூன் 23 - சூலை 1 |
| 7. புணர்பூசம் | ஆனி 21 - ஆடி 2<br>சூலை 5 - சூலை 18 |
| 8. பூசம் | ஆடி 3 - ஆடி 16<br>சூலை 19 - ஆகஸ்டு 1 |
| 9. ஆயில்யம் | ஆடி 17 - ஆடி 30<br>ஆகஸ்டு 2 - ஆகஸ்டு 15 |
| 10. மகம் | ஆடி 31 - ஆவணி 13<br>ஆகஸ்டு 16 - ஆகஸ்டு 29 |

| | நட்சத்திரம் | தமிழ், ஆங்கில மாதம் |
|---|---|---|
| 11. | பூரம் | ஆவணி 14 - ஆவணி 26<br>ஆகஸ்டு 30 - செப்டம்பர் 11 |
| 12. | உத்திரம் | ஆவணி 27 - புரட்டாசி 9<br>செப்டம்பர் 12 - செப்டம்பர் 25 |
| 13. | அஸ்தம் | புரட்டாசி 10 - புரட்டாசி 22<br>செப்டம்பர் 26 - அக்டோபர் 8 |
| 14. | சித்திரை | புரட்டாசி 23 - ஐப்பசி 5<br>அக்டோபர் 9 - அக்டோபர் 22 |
| 15. | சுவாதி | ஐப்பசி 6 - ஐப்பசி 18<br>அக்டோபர் 23 - நவம்பர் 4 |
| 16. | விசாகம் | ஐப்பசி 19 - கார்த்திகை 1<br>நவம்பர் 5 - நவம்பர் 17 |
| 17. | அனுசம் | கார்த்திகை 2 - கார்த்திகை 14<br>நவம்பர் 18 - நவம்பர் 30 |
| 18. | கேட்டை | கார்த்திகை 15 - கார்த்திகை 28<br>டிசம்பர் 1 - டிசம்பர் 14 |
| 19. | மூலம் | கார்த்திகை 29 - மார்கழி 12<br>டிசம்பர் 15 - டிசம்பர் 27 |
| 20. | பூராடம் | மார்கழி 13 - மார்கழி 25<br>டிசம்பர் 28 - சனவரி 9 |
| 21. | உத்திராடம் | மார்கழி 26 - தை 9<br>சனவரி 10 - சனவரி 22 |
| 22. | திருவோணம் | தை 10 - தை 22<br>சனவரி 23 - பிப்ரவரி 4 |
| 23. | அவிட்டம் | தை 23 - மாசி 5<br>பிப்ரவரி 5 - பிப்ரவரி 17 |
| 24. | சதயம் | மாசி 6 - மாசி 18<br>பிப்ரவரி 18 - மார்ச்சு 2 |

| நட்சத்திரம் | தமிழ், ஆங்கில மாதம் |
|---|---|
| 25. பூரட்டாதி | மாசி 19 - பங்குனி 1<br>மார்ச்சு 3 - மார்ச்சு 15 |
| 26. உத்திரட்டாதி | பங்குனி 2 - பங்குனி 13<br>மார்ச்சு 16 - மார்ச்சு 27 |
| 27. ரேவதி | பங்குனி 14 -பங்குனி 27<br>மார்ச்சு 28 - ஏப்ரல் 10 |

## மூன்று மொழி மாதங்கள்

| தமிழ் | ஆங்கிலம் | வடமொழி |
|---|---|---|
| சித்திரை | ஏப்ரல் - மே | மேசம் |
| வைகாசி | மே - சூன் | ரிசபம் |
| ஆனி | சூன் - சூலை | மிதுனம் |
| ஆடி | சூலை - ஆகஸ்டு | கடகம் |
| ஆவணி | ஆகஸ்டு - செப்டம்பர் | சிம்மம் |
| புரட்டாசி | செப்டம்பர் - அக்டோபர் | கன்னி |
| ஐப்பசி | அக்டோபர் - நவம்பர் | துலாம் |
| கார்த்திகை | நவம்பர் - டிசம்பர் | விருச்சிகம் |
| மார்கழி | டிசம்பர் - சனவரி | தனுசு |
| தை | சனவரி - பிப்ரவரி | மகரம் |
| மாசி | பிப்ரவரி - மார்ச்சு | கும்பம் |
| பங்குனி | மார்ச்சு - ஏப்ரல் | மீனம் |

*மழைவளம்*

153. அகல வட்டம் - சூரியனைச் சுற்றி பெரிய ஒளி வட்டம் காணப்படின் பகலில் மழை பெய்யும்

154. சூரியனைச் சுற்றி வட்டம் காணப்படின் நாட்டில் வறுமை உண்டாகும் (முரண்பாடான இருமொழிகள்)

155. கொரடு - வானவில்

156. மாரிமருந்து - கிழக்குத்திசை

157. மேல் - மேற்கு, கீழ் - கிழக்கு

159. குடத்திலே-கும்பம், ஒரு லக்கனம்; மாசி - பங்குனி, பிப்ரவரி-மார்ச்சு, கப்பிலே கழுதை மேயும் - சரியாக விளையாது

160. கூனிவில் - வானவில், குணதிசை - கிழக்குத்திசை, பாணியாமல் - தாமதிக்காமல், மாட்டை விற்று ஆட்டை வாங்கு, தானியத்தை சேமித்துவை

162. கொப்பிலே கொரடு போட்டால்-மாலையில் வானவில் தோன்றினால்

165. சுவாதி - ஒரு நட்சத்திரம், அக்டோபர் 23 முதல் நவம்பர் 4 வரை; தமிழ் ஐப்பசி 6 முதல் 18 வரை

166. காச் செப்மானம் - காலைச் செவ்வானம்

167. ஆஸ்வீதச் செம்மானம் - காலைச் செவ்வானம்

169. காலைச் செம்மானம் கடுக மழை, காலைச் செம்மானம் காலத்திற்கும் மழை இல்லை என்ற முரண்பாடான கருத்துக்கள் கொண்ட பழமொழிகள் உள்ளன. இவை இடத்திற்கு இடம் காணப்பட்ட வேறுபாடாக இருக்கலாம்.

173. பம்மல் - மேகம் கனிந்து இடி இடித்தல்; பருமழை-கனமழை

176. ஆகாயம் மணற்கொளித்திருந்தால் - வானில் மேகம் திட்டுத் திட்டாகச் சிதறி இருந்தால்

177. மாரி அடைக்கில் - வடகிழக்கில் மேகம் கனிந்தால்

178. மாரிமூலை - வடகிழக்குத்திசை

180. கலையும் அப்பைக்கண்டு - கலைந்து செல்கிற மேகத்தைப் பார்த்து

181. கரு அழிந்தால் - மேகம் கலைந்தால்

182. உப்பல் - கடுங்காற்று

189. வடந்தை - வடக்குக்காற்று

190. கச்சான் - மேற்குக்காற்று
கச்சானுக்கு மச்சான் மழை - மேல்காற்று நல்ல மழையைப் பெய்விக்கும்

191. ஆடித்தேரி - ஆடிக்காற்று

193. மாரி, தென்றல் அடித்தால் - மழைக்காலத்தில் தெற்குக்காற்று அடித்தால் மழை பெய்யாது

197. ஆவணியில் மெல்லிய காற்று வீசினால் காவிரியில் கரை புரள நீர்பெருகும்

199. மூலம் - மார்கழி முன்பகுதி (டிசம்பர் பின்பகுதி)

201. மிச்சமானால் - மிகுதியாகப் பறந்தால்

202. செல் - ஈசல்

206. திட்டை - மேடு

207. தட்டான் - தட்டாம்பூச்சி

225. நாகை - நாவல் (நகப்பழம்)

216. பொங்கும் காலம் - மழைவளம் நிறைந்த காலத்தில் புளியங்காய் மிகுதியாய் விளையும்
மங்கும் காலம் - மழை வளம் குறைந்த காலத்தில் மாங்காய் மிகுதியாய் விளையும்

217. கொன்றை வேந்தன்-72

218. ஈசானிமூலை - வடகிழக்குத்திசை

219. கொடிக்கால் - வடமேற்குத்திசை

220. ஈழமும் கொங்கும் - ஈழநாடும் கொங்குநாடும் (எதிர்த்திசை மின்னல் மழையைக் கூட்டும்)

222. பட்டறை திற - களஞ்சியத்திலிருந்து விதையை எடு

224. சோதி - சுவாதி நட்சத்திரம், ஐப்பசி 6 முதல் 18 வரை, அக்டோபர் 23 முதல் நவம்பர் 4 வரை

229. அசுவணி, கார்த்திகை-பங்குனி-சித்திரை, ஏப்ரல்-மே

232. ஆருத்திரை - ஆருத்திரா தரிசனம்-கார்த்திகை மாதம்

233. சிங்கம் - ஆவணி, ஆகஸ்டு - செப்டம்பர்

235. ஆனிஉண்டாம் - கேடு உண்டாகும்

236. ஆனைக்கொம்பு முளைக்கும் - நெற்பயிரில் ஆனைக் கொப்பு நோய் விழும்

238. துலா - ஐப்பசி, அக்டோபர் - நவம்பர், ஐப்பசியில் இடி இடித்தால் மழை இல்லை

239. கருந்தண்டு ஈன்றல் - கதிர்களில் மணிகள் மிகுந் திருக்காது (சாவியாகும்)

244 முதல் 255 வரை நூல் இறுதியில் பார்க்க

260. விசுக்கழிந்த மறுநாள் - சித்திரை முடிந்த மறுநாள்

261. அசுவணி சர்வநாசம் - பங்குனி சித்திரையில் (ஏப்ரல்) மழை பெய்தால் எல்லாப் பயிர்களும அழியும்

252. பரணி - சித்திரை 13 முதல் 25 வரை, ஏப்ரல் 26 மே 9 வரை

266. சினையை அழிக்கும் - பலனைக் கொடுக்கும்

270. வைகாசி மாதம் வாய்மடையில் ஏர்பூட்ட - வைகாசி மாதம் வயலில் ஏர் பூட்டு மளவு மழை உதவினல் அவ்வாண்டு புளி நன்ருக விளையும்

272. ஆனி குறுகினல் - ஆனி மாதத்தில் மழை பெய்யா விட்டால்

274. ஆனி அடைச்சாரல் - ஆனியில் தொடர்ந்த தூரல் இருந்தால் ஆவணியில் நல்ல மழை பெய்யும்

276. ஆடி வெப்பல் - ஆடி மாத வெய்யில்

279. ஆயிரங்கண்ணுடையான் - இந்திரன் - மழைக்கடவுள்

280. ஆனி அரவட்டை - ஆனி மாதத்தில் மழை பெய்யாவிடின், அகவிலை நெல்விலை - நெல்விலை அதிகரிக்கும்

290. பன்னிரெண்டு பாட்டம் - பன்னிரெண்டு தடவை

308. கால்கோடை - கோடைக்காலம் தொடங்கிவிடுகிறது, மழை இல்லை

310. விளக்கிவிட்டால் - கார்த்திகைத் தீபத்திற்குப் பின் மழை இல்லை

311. மூலம் - ஒரு நட்சத்திரம். கார்த்திகை 29 முதல் மார்கழி 12 வரை, டிசம்பர் 15 முதல் 27 வரை

*உழவு*

342. மூலைக்கரை - வயலின் மூலை முடுக்குகள்

343. வெண்கார்ப் புழுதி - நன்ருக உழுத நிலம்

346. அதிர அடித்தால் - நன்ருக உழுதால், உதிரவிளையும் கூடுதலாக விளையும்

347. குன்னு - குன்று; உயர் விளைச்சல் காணும்

348. உழுது முடித்த உடனே கட்டிகளை மிதித்து உடைத்து விடுதல் (சேற்று உழவுக்குப் பொருந்தும்)

350. உழவுக் கள்ளன் - உழவை மிச்சப் படுத்துபவன், இழிவுக்கள்ளன் - மிகவும் வெறுக்கத்தக்கவன்

351. குழி - 66 செண்ட், மூன்று குழி - இரண்டு ஏக்கர்

353. ஆற்றப்புழுதி - நுண்மையாக உழுது புழுதிப்படுத்திய நிலம்

359. உரத்தைக் காட்டிலும் உழுவது சிறந்தது

360. உழவு குறைந்தால் எவ்வளவு எருப் போட்டாலும் பலன் இல்லை

363. அழிய உழு - ஆழமாகவும், நெருக்கமாகவும் உழுதல்

369. தாழ-ஆழமாக, தளிரோடும்-நல்ல விளைச்சல் காணும்

374. மேலைக்கு உழுவார் - ஒப்புக்கு, அக்கரை இல்லாமல் காலங்கடந்து உழுபவர்

378. புழுதி உலர்ந்தால் - உழுத புழுதி விதைப்பதற்கு முன் முழுமையாகக் காய்ந்து விட்டால்

379. உழுது காய்ந்தால் - உழுதபின் அளவான ஈரம் இருப்பின், வித்து இரட்டி காணும் - இரண்டு மடங்கு விளையும்

380. கம்மல் உழவு - சரியாக உழுதால், அப்புட்டும் - அவ்வளவும்

384. பூரணம் - முழுநிலவு

385. ஐயாட்டுக்கிடை - ஐந்து முறை ஆட்டுக்கிடை போடுவதற்குச் சமம்

388. மூரி எருத்தின் உழவு இன்னாது (இன்னா நாற்பது-20)
மாரிநாள் கூவும் குயிலின் குரல் இன்னா,
வீரமிலாளர் கடுமொழிக் கூற்று இன்னா
மாரிவளம் பொய்ப்பின் ஊர்க்கு இன்னா
ஆங்கு இன்னா
மூரி எருத்தின் உழவு

கட்டுக்கடங்காத காளையைக் கட்டி உழுவதும் துன்பம் தரும், வயதான எருத்தைக் கட்டி உழவு செய்தால் துன்பம் தரும் என்பாரும் உளர்.

392. கார் அடித்தால்தான் - கொழு கூர்மையாக இருந்தால்தான்

393. கட்டைக்குத் தகாது - மரக்கலப்பையால் (இரும்புக் கொழு இல்லாத) உழுவது பயனற்றது

396. கொம்பால் உழுது - கூர்மையான கலப்பையால் உழுது, குண்டியால் மரமடி - அகலமான பலகை கொண்டு (பரம்படித்துச்) சமப்படுத்த வேண்டும்

397. உழுபவன் வலிமைக்கு ஏற்ற கலப்பையும் உயரத்திற்கு ஏற்ற மேழியும் இருத்தல் வேண்டும்

398. நிலத்தில் ஆழப்பதியாது, உழுதும்போது மேலே வருகின்ற கலப்பை பயனற்றது

408. வேலி - $6\frac{2}{3}$ ஏக்கர், ஈரணை - இரண்டு ஏர் மாடுகள் (நான்கு எருதுகள்)

410. கட்டி விதை - தண்ணீர் பாய்ச்சி உழுது விதைத்தல்

413. போடுகாலில் - உழுத சாலில், விளைகின்ற நிலத்தில்,

414. அமிஞ்சிக்கு - கவனமின்றி உழுதால் சரியாய் விளையாது

418. ஊரார்க்கு ஏற்ற தொழு - குற்றத்திற்கு ஏற்ற தண்டனை (ஊருக்கு ஏற்றாற்போல் தண்டனையும் வேறுபடும். தொழு - தண்டனை)

421. காலப்புழுதி இல்லாதவன் - உரிய காலத்தில் உழுது போடாதவன்

## எரு

423. எரு, குழை இன்றி - எருவும் தழையும் இல்லாமல், குழை - தழை

427. செய் - வயல்

434. சப்பை - பயனற்றது

435. எமை - மண்

444. அங்கலாய்த்தவன் - பொறுமையுடையவன்

445. ஆடே எரு - ஆட்டெரு சிறந்தது 'மாட்டெருவு ரண்டு பொதி ஆட்டெரு மூன்று பொதி மனமாரவே பார்த்த பின்' என்பது நாட்டுப்பாடல்

447. ஆடு மறித்த தொளி, ஆட்டுக் கிடைவைத்த வயல் ஒரு ஏக்கர் நிலத்திற்கு ஒரு நாளைக்கு 2000 ஆடுகளை கிடைவைத்தால் போதுமான உரம் கிடைக்கும்.

452. கோமயம் - பசுவின் சிறு நீர்

454, அப்பூ - அந்தப் போகம். பூ - போகம் - பட்டம்

455. ஆட்டெரு பயிர் வளர்ச்சிக்கு உதவும்; தழைச் சத்து அதிகம். ஆவரந்தழை நெல்மணிகள் மிகுதியாக விளைய உதவும்; மணிச்சத்து அதிகம்

456. கார்ப்பயிருக்கு ஆட்டெருவும்
சம்பாப் பயிருக்குத் தழை எருவும் சிறந்தது

458. காணிக்கு ஒரு கருவேல்-கருவேல மரத்தைக் கொண்டு ஆடுகள் வளர்க்கலாம். காணி - 33 செண்டு, மூன்று காணி ஒரு ஏக்கர்

473. ஒடுக்கும் நிலத்தை - நிலத்தின் சத்தைக் குறைக்கும்

474. ஆற்றல் - ஆறப் போடுதல், பயிருக்குப் பயிர் கால இடைவெளி விடுதல் நல்லது

476. ஆத்திசூடி - 22

478. கடக்க நிற்கும் - எல்லாவகையான தாக்குதலையும் தாங்கி நிற்கும்

479. பாழில் - வளமற்ற நிலத்தில்

482. கோப்பு - பருவம்

487. அய்யஞ்சு - இருபத்தைந்து வயதில்

492. உத்தரம் - ஆவணிமாதம், செப்டம்பர் 12 முதல் 25 வரை

493. சிங்கம் - சிம்ம லக்கனம். ஆவணி மாதம், ஆகஸ்டு - செப்டம்பர்

501. மடிவிரை - வீட்டில் இருக்கும் விதை
பிடிவிரை - விதைக்கக் கையில் எடுத்த விதை

504. அசையோ பயிர் - பயிர்கள் இடைவெளிவிட்டு இருக்கவேண்டும்
அடப்போ குடித்தனம் - மக்கள் நெருங்கிய உறவுடன் இருக்க வேண்டும்

507. கம்மல் - குறைப்பட்டத்தில் விதைத்த பயிரும்
ஓம்மல் - ஊர் வாய்ப்பட்ட குடும்பமும்

## விதை

514. விருட்சியில் - மழை பெய்யும் பொழுது, மிகுந்த ஈரத்தில்

515. ஈரம்தானே பீரம் பயிர்க்கு - அளவான ஈரம் பயிர்க்குத் தாய்ப்பால் போன்றது; பீரம் - தாய்ப்பால்

517. வெப்பில் - காய்ந்த நிலத்தில்

519. அடர விதைத்து - கை விதைப்பு நெருக்கமாக இருத்தல் வேண்டும்

## நீர்ப்பாசனம்

532. தண்ணீர் செல்லும் வாய்க்கால் சுத்தமாக இல்லாமல் புல் முளைத்திருந்தால் வளைந்த புல்லும் மூன்று குறுணி அளவு தண்ணீர் ஓட்டத்தைத் தடுத்து நிறுத்தும்
முக்குறுணி - ஒரு குடம் அளவு தண்ணீர்

537. பட்டறை - பட்டடை - இறைப்புப் பாசனமுள்ள நன்செய் நிலம்

539. கரையுள்ளதே தோட்டம் - நிலத்தைச் சுற்றி கரை இருப்பது மண்வளத்தைப் பாதுகாக்கும்

543. ஏற்றம் வைத்து இறைப்போர்க்கு ஒருபோக சாகுபடிக்கு இறைவைப் பாசனம் ஏற்றது. முப்போகத்திற்கும் இறைப்பது மிகவும் கடினம்

547. சாய்கிறது - வீணுகிறது

## களை

559. கைமுடியுள்ளவன்-கருவூலம்-பணம் உள்ளவன், அவனுடைய வயல்கள் களஞ்சியம் நிறைய விளையும்

565. கவடு - வஞ்சனை

570. தாதனு - ஒருவகைப் புல், புஞ்சை நிலத்தில், குறிப்பாக நிலக்கடலை வயலில் தோன்றும் களை. சேலம் மாவட்டத்தில் இதனைத் 'தாதரா' என்பர்

571. பல்லி - ஒருவகைக் களைச்செடி, புஞ்சை நிலத்தில் தோன்றும்

## காப்பு

572-3. ஒரே பழமொழி

574. கட்டியின் கீழ் கதிர் - புடையிலிருந்து கதிர் வெளி வந்து வளைந்து இருக்கும்

579. செம்பாடு - செம்பை எனும் நோய், பயிர்களின் சோவை செந்நிறமாகிவிடும்

587. பருத்து வரும் - நன்ருக விளையும்

## நெற்பயிர்

591. ஆத்திசூடி - 71

592. எள்ளுப் பயிராஞலும் - சிறிதளவு நிலத்தில் பயிரிட்டாலும் அல்லது சாதாரண நெல்லைப் (கார்) பயிரிட்டாலும்

593. வெள்ளைக் களரில் - உவர் நிலத்தில்

599. விதைத்து முளைப்பதற்குள் மழை பெய்வது நெல்லுக்கும் கொள்ளுக்கும் ஆகாது.

601. விதைத்த நாலாம் நாள் தண்ணீர் விடுதல் நஞ்சு பாய்ச்சுவதற்குச் சமம்

606. மோட்டை - நெல் வயலின் வரப்புகளில் நண்டு செய்யும் ஓட்டை, அதன் வழியாக தண்ணீர் வெளியில் சென்றுவிடும்.

கோட்டை - விதை நெல்லை வைக்கோல் புரியில் வைத்து உருண்டை போலக் கட்டி வைத்தல். ஏறத்தாழ ½ மூட்டை அளவு கொண்டதாக இருக்கும்.

612. பாலி - நீர்நிலை, குளம் போன்றது

613. தடை - நீர்பாய்ச்சுவதற்கு வசதியாக இருக்கும் பொருட்டு ஒரு நெல் வயலை இரண்டாகப் பிரிக்கப் போடும் சிறு கரை

614. புன்செய்ப் பயிர்கள் கதிர்கள் ஈன நல்ல வெய்யில் வேண்டும். நன்செய்ப் பயிர்கள் கதிர்கள் ஈன நல்ல ஈரம் வேண்டும். புன்செய்யில் மண் இறுகி ஈன வேண்டும். நன்செய்யில் மண் இளகி விளைய வேண்டும்

619. பதக்கு - ஒரு முகத்தல் அளவு 16 படி

623. கத்திரி - அக்கினி நட்சத்திரம் - சித்திரைமாதம்

631. நடவுக்கு ஒரு பங்கு விதை என்றால் விதைப்புக்கு அதைப் போல் நாலு பங்கு விதை வேண்டும்

634. கலம் ½ மூட்டை, ஏக்கருக்கு 1 மூட்டை விதை. கன்னியாகுமரி போன்ற நீர் மிகுந்த பகுதிகளில் நெல் விதைப்பு இன்னும் இந்த அளவிலேயே நடை பெறுகிறது

640. கை இடுக்கில் வைத்துக் கொள்ளும் அளவிற்கு வைக்கோலும் தேங்காய் ஓட்டு அளவிற்கு நெல்லும் விளையும். சரியான விளைச்சல் இராது என்பது பொருள்

643. அஸ்தத்தில் - அஸ்தமனத்தில் - மாலை நேரத்தில் - நாற்றுவிட வேண்டும். அஸ்தத்தில் - அஸ்த நட்சத்திரத்தில் - ஆவணி மாதத்தில் - செப்டம்பரில்

655. வெள்ள உழவு - மழை பெய்து வயலில் தண்ணீர் ஓடிக் கொண்டிருக்கும் பொழுது நடுதல் பயனற்றது

656. ஐதது - அளவான இடைவெளி, பொளக்கம்

662. நெருக்க நட்டு நெல்லைப்பார் - நெருங்க நடுவதால் பயிரின் தோற்றம் அழகாக இருக்கும், இடைவெளி விட்டு நடுவதால் விளைச்சல் சிறப்பாக இருக்கும்

664. கார்ப்பயிர் குத்துக்கு அதிகம் வைத்து நடவேண்டும், சம்பாப்பயிர் குத்துக்குக் குறைவாக வைத்து நட வேண்டும். பிசானம் - சம்பாப்போகம்

667. பொற்சாலி - சம்பாவில் ஒருவகை நெல்

663. நவரை - ஒரு வகை நெல், ஒரு பட்டம் (கார், பிசானம் போல) டிசம்பர் மாதம் - தஞ்சைப் பகுதியில் வழக்கம்.

669. நட்ட நெற்பயிர் நாற்பது நாளில் வேர்பிடித்துத் தழைத்து வளரும் (நீண்ட கால சம்பாவகை)

670. பயிர்கள் நாலில் ஒரு பங்கு காலம் நாற்றங்காலில் இருக்க வேண்டும். நாற்றங்காலில் முப்பது நாள், நடவு திரும்ப முப்பது நாள்

671. சேத்தில் - சேற்றில், நாத்தில் - நாற்றில், சாத்தில் - வயலில்

100 குழிக்கு 30 கலம் நெல் விளையும்

100 குழி - 1/3 ஏக்கர், கலம் ½ மூட்டை - ஏக்கருக்கு 45 மூட்டை விளைச்சல் (தஞ்சாவூர் அளவு)

675. பூசணியில் பூமலர்வது போல ஆவணிக்கார் சிறந்து விளையும்

676. மழையின்றி மின்னினால் கார் நெல் விளையாது, மழையின்றி இடி இடித்தால் சம்பாவும் விளையாது

677. கார் நெல் நட்ட வயல் விரைவில் காய்ந்து விடும் (கோடைகாலம்)

689. கார்நெல்லையும் சம்பா நெல்லையும் விற்காமல் சேமித்து வைப்பதில்லை. ஆண்டுமாறின கார் - ஓராண்டு கழிந்த பழைய நெல்

693. கருடபட்சி, குண்டுச்சம்பா, சன்னச்சம்பா - ஆகிய நெல் வகைகள் மிகச் சிறந்தவை

694. சேடை - நெல் அறுத்துக் காய்ந்த வயலை நீர்ப்பாய்ச்சி மீண்டும் உழுதல்

697. வெம்பா - பனி

698. சோதி - சுவாதி நட்சத்திரம், ஐப்பசி - அக்டோபர்

699-701. மணல்வாரி, தில்லைநாயகம், பொற்சாலி- நெல்வகைகள்

703. மோருக்குச் சோறு ஒதுக்கி உண்ணுவது போல நவரைப்பட்டம் பயிரிட (மார்கழி - டிசம்பர்) சிறிய அளவேனும் நிலம் வைத்திருக்க வேண்டும்

706. உணவுக்கு ஏற்ற நெல் மோசனம் என்ற இரகம்

707. மணக்கத்தை - ஒரு வகை நெல்

713. பதர்கொள் - நெல்லை விலைக்கு வாங்கவேண்டும்

714. அஃகம் - தானியம்,

718. நெல் வெள்ளாமைக்குப் பிறகு மற்ற வெள்ளாமை எல்லாம் மிகவும் சாதாரணம்; நெல்லே முதன்மை யான வெள்ளாமை

## பயிர்வகைகள்

722. மகரப்பட்டம்-தைப்பட்டச்சோளம், குச்சைமச்சாக்கும்

723. பூலா - பூலாமரத்தில் பழம் பழுத்தால் அவ்வாண்டு சோளம் நன்ருக விளையும்

724. சோளப் பயிர் விரைவில் வளரும், கம்பு காய்ந்தது போல் இருப்பினும் நன்ருக விளையும்

725. கரம்பு - தரிசுநிலம்

725. கால் உழவு - பயிர் வளர்ந்த பிறகு அடர்த்தியைக் கலைக்க ஓட்டி விடும் உழவு

728. கார் - கார்நெல், கதிரில் முடுகும்-கதிர் முற்றக் காய வேண்டும்

729. நெல்லுக்கு இணையானது க்ம்பு. புல் - கம்பு

730. கடகம் - (பொட்டி) கூடை

731. மிருகசீரிடம் - ஒரு நட்சத்திரம், ஆனி, சூன் 7 முதல் சூன் 22 வரை

731. ரோகிணி - ஒரு நட்சத்திரம். வைகாசி - மே 24 முதல் சூன் 6 வரை

735. புட்டுங்கழியும் - கதிர் விரியும்

738. மஞ்சை - பூசணம்

740. மடவன் - சுறுசுறுப்பு இல்லாத உழவன்

742. குறுணி - 8 படி

746. காணம் - கொள். கல்லைப் பிளந்து - சரளை நிலம்

754. எறங்காடு - கருமண் நிலம், கல்லங்காடு - சரளை மண் நிலம்

758. கொத்தான் - ஒருவகைக் களைச்செடி

762. காரை - ஒருவகை வேலிச்செடி

768. விதைக்கு புதுப் பயறுகளைப் பயன்படுத்த வேண்டும். நாள் பட்டால் செல்லரித்துவிடும்

777. ஏழு உழவு உழுதும், முறையாக வீச்சுக்கு ஏழு எள் விதைத்தும், வட்டவடிவமாக இலை வரும்போது மான் மேய்ந்து வீணாகிவிட்டது. எஞ்சியது காய் பிடிக்கும் தருணத்தில் மழை பெய்து வீணாகிவிட்டது. எள் வெள்ளாமைக்குக் கவனமும் வேண்டும், இயற்கையும் ஒத்துழைக்க வேண்டும்.

781. எள்ளையும் கொள்ளையும் குறைந்த ஈரத்தில் விதைக்க வேண்டும்.

784. தை மாதம் எள் விதைப்பைத் தவிர்த்து, மாசிப் பட்டத்தில் விதைக்க வேண்டும்.

797. ஏறுகொண்ட - சிறந்த

800. கார் - கார்பட்டப் பருத்தி

824. அணில் ஒரு மரத்திலிருந்து மற்றொரு மரத்திற்கு மட்டை வழியாகத் தாவிச் செல்லாத அளவிற்கு இடைவெளி இருக்கவேண்டும்

825. சோலை - தென்னந்தோப்பு

831. வழுதலங்காய் - கத்தரிக்காய்

839. இலைதின்னி காயறியான் - ஒரு வாழையில் ஏறத்தாழ முப்பது இலைகள் விடுகின்றன. அதில் பத்து வரை அறுவடை செய்யலாம். அதற்குமேல் அறுவடை செய்தால் காய்கள் குறைகின்றன என்று ஆராய்ச்சி கூறுகின்றது.

840. நத்தவாழை - இலைவாழை

841. வாழை நட இளங்கன்றும் கத்திரி நட முற்றிய நாற்றும் நல்லது

846. கார் - கார்நெல்

847. கக்கரி – முள்வெள்ளரி, கொத்து - களை வெட்டுதல்

852. மதவைநிலம் - கருமண் கலந்த நிலம், செம்மண்

854. விசாகக் கார்த்திகை - வைகாசி, மே - ஜூன்

856. கவரை - நாயுடு இனம்

863. பந்தாடை - பந்துபோல

864. பெல்லாரி - ஒருவகை வெங்காயம். ராமப்பாருபார் அமைக்கும் முறைக்குப் பெயர். நெல்லுக்குச் சிறிய வரப்பு

867. கலக்கொத்து - செடியைச் சுற்றி வட்டமாகக் கொத்தி விடுதல்

869. சேனை - சேனைக்கிழங்கு, களவாண்டு - திருடி

881. புறத்தி புறத்தியே - பயனற்றது, யாரும் சேகரிப்பது இல்லை

## கால்நடை

882. குண்டை வளம் - கால்நடைகளின் செழுமை

892. முக்கிவர- மேய்ச்சலுக்குச் சென்று வயிறு நிறையாமல் வருமாயின் நக்கிவரும் - அக்குடும்பம் வீழ்ச்சியுறும்

895. ஆடு ஒரு மாடு - ஆட்டின் விலை மாட்டின் விலைக்குச் சமம்

896. மார்கழியில் கோயில் பூசாரிக்கு வருவாய் நிறையக் கிடைக்கும். அதேபோல் மேய்ச்சல் நிறைந்துள்ள மாசி மாதத்தில் ஆட்டுக்கிடாய்கள் கொழுத்திருக்கும்.

897. ஏரி மிதந்தால் - கொம்பு முளைத்துவிட்டால், காளை மேய்ப்பானை மதியாது

898. ஈடன் - உழைப்பவன், பாடு - உழைப்பு, கூழை - குள்ளமான, நுழம்பு - சேற்றுக்குப் பயப்படாது

899. ஆலம்பாடி - வடக்கு திசை (தமிழகத்திற்கும் வடக்கே) இருந்து வருகின்ற மாடுகள் அழகாக இருக்கும். ஆனால் உழவுக்கு வராது

900. வல்விலைக்கூறை - விலை அதிகமான சேலையை வாங்கக்கூடாது. மெல்விலைக் காளை - விலை குறைந்த காளையை வாங்கக்கூடாது.

901. மயிலை - வெண் சாம்பல்நிறம், பில்லை - சாம்பல்நிறம்

905. ஏறுவால் - மிக நீண்டவால், கூழைவால் - குட்டை வால் - இரண்டும் அழகாக இராது அதனால் விலை குறையும்.

907. மடக்கொம்பு - வளைந்த கொம்பு

908. மட்டை - கொம்பில்லாத மாடு - (கூர்மையான கொம்பில்லாதவை)

918. சண்டி கலைந்தால் - வலிய காளை மிரண்டால் அடக்கி ஓட்டுவது கடினம்.

919. எருதாகுமா கிடா? எருமைக் கிடாவைக் கொண்டு உழவு ஓட்டும் முறையும் இருந்துள்ளது. 'எருமை உழவ!' என்பது சங்க இலக்கியம் இருப்பினும் எருதைப் போல் எருமைக்கிடா உழாது என்பதை இப்பழமொழி உணர்த்துகிறது.

924. வெக்கை நோய்வரின் அக்கால்நடையை மற்ற கால்நடைகளிலிருந்து தனியே பிரித்து விடுவதே முதல் மருந்தாகும்.

928. ஆவும் தேவும் - பசுவும் தென்னையும், தே - தெய்வம் என்பாரும் உளர்

931. மதுரம் - இனிமை, பச்சைத்தீவனம் பால் அதிகம் கொடுக்கும். காய்ந்த தீவனம் சுவை அதிகமாக இருக்கும்

934. முன்இறப்பு - எறவானம், வீட்டுக்கூரையின் முன் பகுதி

936. நாகும் - இளங்கன்றும், நாலடியார் -115

939. முதார்க்கன்று - முற்றிய கன்று

940. வடவி - பனைமரம்

944. மட்டப்புறக்கட்டை - கட்டாந்தரையாக உள்ள புல்வெளி

950. துட்டு - 4 காசு; 192 பழைய காசு 1 ரூபாய் (இன்றைய 2 காசுக்குச் சமம்)

## ஒட்டுமொழிகள்

(வேறொரு பொருளை விளக்குபவை - இடத்திற்கு ஏற்பப் பயன்படுத்த வேண்டியவை)

952. விளா - வயல் உழும்பொழுது பிரித்து ஓட்டும் ஒரு பிரிவு, விளா என்றாலே ஒவ்வொரு விளாவுக்கும் பாத்திகள் இருக்கும். அதுபோல் குடும்பம் என்றால் உட்பிரிவுகள் பல இருக்கத்தான் செய்யும். வீட்டுக்கு வீடு வாசப்படி என்பதுபோல. அதனால் விளாவையும் பாத்தியையும் பற்றி இப்பழமொழி குறிப்பிடவில்லை எனத் தெளிதல் வேண்டும்.

953. பலர் கூடிச் செய்யும் வேலையில் தானும் செய்ததாக ஒப்புக்குச் சேர்ந்து செய்வது.

954. செய்யத் தெரியாதவன் அதிக வசதிகள் தேடுவான்.

955. செய்ததற்கும் அனுபவித்தற்கும் சரியாய்ப் போயிற்று இனி ஒன்றும் இல்லை. என்று சொல்லி ஏமாற்றுவது.

956. கெட்டுப் போனவளோடு யார் வாழ்ந்தால் என்ன?

957. நம்பியவர்களே மோசம் செய்தால் நல்லது எப்படி நடக்கும்?

958. பெரிய தொல்லேயிலிருந்து விடுபட்டாலும் சிறு தொல்லேகள் இருந்துகொண்டே இருக்கும்.

959. செயலுக்கு உரிய பலன்தான் கிட்டும்

960. பெண்கள் கட்டுப்பாடாக இருந்தால் ஆண்களால் ஒன்றும் செய்துவிட முடியாது.

851. பெண்கள் கட்டுப்பாடாக இருந்தாலும் ஆண்களின் தொல்லே இருந்து கொண்டே இருக்கும்; அது இயற்கை என்பது பொருள்.

962. கொடுக்கிறுர்கள் என்பதற்காக அவர்களிடம் உள்ளதை எல்லாம் வாங்கி விடக்கூடாது

963. வாய்ப்புள்ள போதே செய்து முடித்துவிட வேண்டும்

964. உழைத்துப் பெற்ற பொருள்களின் பெருமையை உழைக்காதவர் அறியமாட்டார்கள்

965. நல்லவர்களுக்கு ஒரு சொல் சொன்னுல் போதும் உணர்ந்து செயல்படுவார்கள்

965. கிடைக்காத பொருள் பெரிதாகவே தெரியும்

967. உழைக்கின்றவன் உண்ணவும் உரிமை உடையவன்

968. அதிகம் உண்பவனுக்கு கொஞ்சமாகக் கொடுத்துப் பயனில்லே

969. தன்முயற்சியால் வாழத் தெரியாதவனுக்கு எவ்வளவு உதவியும் பலனில்லே

970. பெற்றவர்கள் துன்பத்தைப் பிள்ளேகள் அறிய மாட்டார்கள்

671. சிறியதைக் கொடுத்து பெரியதைப் பிடுங்குவது

1065. விடலேகள் - சிறுபிள்ளேகள்

1068. கடமை - வரி, கந்தாயம்

1073. கையேல் வை - ஊருக்கும் அருகில்

1100. அழற்சி - எரிச்சல் ஊட்டும்

1107. வெட்டவெளி - எல்லாவற்றையும் தின்று இடம் மொட்டையாக இருக்கும்

1109. நிதம் - நோய்

1110. சூலாகும் மீன் - சினைப்பட்ட மீன்

1111. மோழை - கொம்பில்லா மாடு

1127. மதத்தால் - கொழுத்தால்

1131. வக்கணை - பலவிதமான புதுக் கோளாறுகள்

## வேளாண்மை உவமைகள்

வேளாண்மை உவமைகளும் வேளாண்மை பற்றிக் குறிப்பிடுவன அல்ல. அந்தச் சொற்களால் வேறு பொருளை விளக்குபவை.

காய்ந்த மாடு கம்பங் காட்டில் புகுந்து தின்பது போல பசி மிகுந்தவன் கிடைத்தது போதும் என்று ஒழுங்கில்லாமல் தின்பான்.

# பயன்படுத்தப்பெற்ற நூல்கள்

வேளாண்மைப் பழமொழிகளும் மரபுத்தொடர்களும்
சி. கே. சுப்பாராவ், வேளாண் துறை, அரசு பதிப்பகம் 1896

விவசாயம்
நரசிம்மலு நாயுடு, கோயமுத்தூர் 1900

பழமொழித் தீபிகை
வே. ஆ. சிதம்பரம்பிள்ளை,
யாழ்ப்பாணம் நாவலர் அச்சுக்கூடம், 1916,

ஆராய்ந்தெடுத்த அறுநூறு பழமொழிகளும் அவற்றிற் கேற்ற ஆங்கிலப் பழமொழிகளும்
நீலாம்பிகை அம்மையார், கழக வெளியீடு, 1952

கழகப் பழமொழி அகர வரிசை
தொகுப்பு, கழக வெளியீடு 1954

தமிழ் நாட்டுப் பழமொழிகள்
துர்காதாஸ், எஸ். கே. சாமி
வானதி பதிப்பகம், சென்னை - 17, 1960

தமிழகப் பழமொழிகள்
கே. எஸ். லட்சுமணன்
செல்வி பதிப்பகம், காரைக்குடி 1951

தென்மொழிகளில் பழமொழிகள்
டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை
சாப்ராஜ் பிரசுரம், 1962

உலகப் பழமொழிகள்
ப. ராமசாமி
வள்ளுவர் பண்ணை சென்னை - 35, 1964

உயிரினங்களும் பழமொழிகளும்
கே. எஸ். லட்சுமணன்,
தொல்காப்பியர் நூலகம், 1964

பழமொழியும் பண்பாடும்
புலவர் செந்துறை முத்து
மல்லிகைப் பதிப்பகம் சென்னை-17 1965

வாழ்வியல் பழமொழிகள்
கே. எஸ். லட்சுமணன்
செல்வி பதிப்பகம், காரைக்குடி, 1967

குடும்பப் பழமொழிகள்
ப. ராமசாமி
வள்ளுவர் பண்ணை, சென்னை 35, 1969

இணைப் பழமொழிகள்
செல்வ கேசவராய முதலியார்,
கழக வெளியீடு, 1974

சமுதாய நோக்கில் பழமொழிகள்
டாக்டர் சாலை இளந்திரையன்
பாரி நிலையம், 1974

பழமொழித் திரட்டு
பண்டித இராம சுப்பிரமணிய நவலர்
செந்தமிழ் நிலையம, தக்கலை, தமிழகம்

பழமொழிகளில் வேளாண்மை
இல. செ கந்தசாமி,
வேளாண் பல்கலைக்கழக ஆய்வு நூல். (1976)
அச்சிடப்படாதது

கம்பன் சுப்பிரமணியம்
புழுதிமொழிகள் - ஏர் உழவன் கட்டுரைகள், 1977



## ஆசிரியரின் நூல்கள்

- ❖ திருக்குறளில் வேளாண்மை
- ❖ வேளாண்மையும் பண்பாடும்
- ❖ இலக்கியத்தில் வேளாண்மை
- ❖ சங்க இலக்கியத்தில் வேளாண்மை
- ❖ பழமொழிகளில் வேளாண்மை

  (வேளாண் பல்கலைக் கழக வெளியீடுகள்)
- ❖ இந்த மண்ணின் மக்கள்
- ❖ காதல் வாழ்வில் கால்நடைகள்
- ❖ காற்றில் கனிந்தவை
- ❖ உழுகின்ற காலத்தில்....
- ❖ குறிக்கோளை நோக்கி....
- ❖ வேளாண் பழமொழிகள்
- ❖ உழவர்கள் பேச்சுமொழி
- ❖ ஓ....அன்றில் பறவைகளே (புதினம்)
- ❖ சித்திரைக்கனி (புதினம்)
- ❖ இலக்கியத்தில் கால்நடைவளம்
- ❖ இதுவோ நாகரிகம் (அச்சில்)
- ❖ வளர்பிறைகள் ,,